உ

சுப்பிரமணியர் துணை.



# வள்ளிநாயகி அம்மானை.



இஃது

திருமங்கலந் தாலூகா சாப்பிட்டூர் ஜமீன்,
நாடாக்கள்பட்டி, மகா-ள-ள-ஸ்ரீ
சுப்பய்ய நாடாரவர்கள் குமாரர்
கி. மு.
ஆறுமுக நாடா ரவர்களால்
இயற்றியதை,
ஷையூர் வித்வான்
சோ. விஸ்வநாத நாடாரவர்களாற்
பார்வையிட்டு

ஷை நூலாசிரியரால், விருதுபட்டி ஸ்ரீமான்
இராமலிங்கக் குருக்க ளவர்களது
சச்சிதானந்த அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

1923

விலை] ரிசிஸ்டர் காப்பிரைட் [அணா 8

உ

சிவமயம்.

# சாத்துக் கவிகள்.

விருதுபட்டி ஸ்ரீமாந்,

## இராமலிங்கக்குருக்களவர்கள் இயற்றியது.

மங்களஞ்சேர் கலியையா யிரத்துப்பத் தொன்பான்
வருடம்பிங் கலந்தனுவில் கார்த்திகைநா ளன்று
செங்கைவடி வேலன்வள்ளி தனைமணந்த கதையைச்
செப்பியரங் கேற்றினன்றெண் டாயுதபா ணியின்சீர்
தங்குதிருச் சந்நிதியில் சான்றவர் நன்னகரில்
தமிழ்க்கவிஞ ரனைவோருஞ் சார்ந்தருகி லிருக்க
திங்கள்குலச் செழியன்மர பினிலுதித்த கவிஞன்
திகழாறு முகமெனும்பேர் படைத்த திறலோனே.

சான்றநகர் மகா-ள-ள-ஸ்ரீ

## சொ. விஸ்வநாத நாடாரவர்கள இயற்றியது.

சந்தனக்கா வளம்பெருகும் சதுரகிரி வடபுறஞ்சேர் சான்றோரூரில்
அந்தநல்ல குலத்துதித்தோன் சுப்பயவேள் புதல்வனறு முகவன் றானும்
கந்தன்வள்ளி தனைமணந்த சரிதமதை யம்மானைக் கவியாச செய்தான்
இந்தவுல கத்திலுள்ள புலவரெல்லா மிதுவும்நல்ல விசையென்றூரே.

ஷையூர் மகா-ள-ள-ஸ்ரீ

## அ. வெ. ரெங்கசாமி நாடா ரவர்க ளியற்றியது

பண்ணவரு மிறைஞ்சுபத முருகோன் முன்னம்
பாளுபல தருவடர்ந்த வனத்தேசென்று
வண்ணமுள மாதுவள்ளி தனைமணந்த
வசனமதம் மானையென வழுத்தக்கேட்டு
கண்ணனுமன் றுதித்தனிற் சிலையினாலே
கடைந்தெடுத்துக் கொடுத்ததிரு வமுதோவென்று
விண்ணவரு முனிவரரும் பற்றையோரும்
விரும்பியனு தினநோக்கி வியந்தார்மாதோ.

இத்திறமை யுடன்விளங்கு மின்னூல் தானு
மியற்றிய தியாவரெனி லியம்பக்கேண்மின்
சித்திரமாய் நிறைந்தபல திருவுமோங்கி
திகழ்சான்ற மாநகரில் செழித்துவாழும்
சத்திரிய குலந்தனிலே யுதித்த பூமான்
சாந்தமிகு சுப்பயவேள் தவத்தினாலே
புத்திரனா யவதரித்துப் புவியின் மீது
புதல்வனெனப் புகழாறு முகவேளாமே.



ஷெ யூர் இந்நூலாசிரியரின் சிறிய தந்தையும், மாசி
கிராமமுன்சீபுமான மகா-ா-ா-ஸ்ரீ

**நா. சி. மாரியப்ப நாடாரவர்களியற்றியது.**

வானவர்சூழ் சதுரவரைச் சார்பு தன்னில்
வடபாகஞ் சான்றநகர் வசித்துவாழ்வோன்
மானவன்சுப் பயபூமன் வரத்தால் வந்தோன்
வளராறு முகநாடன் வளம்பெற்றோங்கும்
கானமயி லேறுகந்தன் குறத்தி தன்னைக்
கடிமணஞ்செய் சரிதமெனுங் கதையைக்கேட்டு
ஞானமுள்ள பாவலர்கள் செவிக்கு நல்ல
நல்லிசைநல் லிசையெனவே நவின்றிட்டாரே.



சந்தையூர் ஜமீன் கீழபட்டி மகா-ா-ா-ஸ்ரீ

**ச. மகாலிங்க நாடாரவர்கள் இயற்றியது**

திருவளர்மருதூர்ப் பதிக்குயர்கோவாக் திரமிகுநாகய பூபன்
அருள்பெறுசான்றோர் நகரில்நாட்டாண்மை யரசசால்பரம்பரை பெற்று
குருபரமுருகன் பழனிவேல்தமக்குக் குறைவிலாத் திருவிழா நடத்தி
பொருள்மிகவுதவு சுப்பையபூபன் புத்திரனாக வந்துதித்தோன்
சண்முகநாதன் வள்ளியைமணந்த சரிதையம்மானை யதாக
மண்டலமீது வளரொளிமதிபோல் மாநித்தோ ரெலாமதிக்கத்
தண்டெருகந்த மருவுபன்னீரும் தாக்குடன்கலந்த வாசனைபோல்
உண்மையாயாறு முகப்பெயர்பெற்றோ னுரைத்தனன்செவிக்கமுதென



[வே

சான்றநகர், சொ. விஸ்வநாத நாடாரவர்கள் மாணாக்கரில்
ஒருவராகிய மகா-ள-ள-ஸ்ரீ

### தி. மூ. கொ. முத்தப்ப நாடாரவர்களியற்றியது.

சிகரமதில்மஞ்சுலவு தென்சதுரா சலவடக்கில் திகழுஞ்சான்றோர்
நகரமதில் சுப்பயவேள் தவத்துதித்த வாறுமுக நாவலோனும்
தகரவெழு புவியதிர வவுணரஞ்சத் திசையுறையுஞ் சர்ப்பம்வாட
ஓகரமதிலூர்பவன் றன்னெண்டொடிமே லம்மானையுரைத்தான்மன் [னே



சையூர் மகா-ள-ள-ஸ்ரீ சொ விஸ்வநாத நாடாரவர்கள் குமாரர்

### ராமசாமி நாடாரவர்கள் இயற்றியது.

திருமகளுங் கலைமகளுமகலாம லனுதினமுஞ் சிறந்துலாவிப்
பெருமைபெறு சான்றநகர்சுப்பயவே ளருந்தவத்திற் பிறந்தபூபன்
அருமைமிகும் அறுமுகவேள் வள்ளியம்மானைதனை யரையக்கேட்டு
மருமலரோ வாசனையோ மாமருந்தோ வெனப்புலவர் வழுத்தினரே



சான்றநகர் மகா-ள-ள-ஸ்ரீ செ. அய்யகுட்டிநாடாரவர்கள் குமாரர்

### சங்கப்ப நாடாரவர்கள் இயற்றியது.

அந்தமுங் கந்தமிக்க அகில்பலா வருக்கை கோங்கு
சந்தனம் பாரிசாதம் தருக்கள்சூழ் வனத்தில் வள்ளி
செந்தினைக் காவல்காக்கத் திருத்தணிப் பதிவாழ் வேலன்
வந்துநன் மணஞ்செய் காதை வழுத்தின னமுதமாக,

இப்பெருங் கதைநூற்செய்த தியாரெனி லியம்பக்கேண்மின்
அற்புதச் சான்றோர்தங்க ளழகிய நகரில் மேவும்
சுப்பயவேள் முன்செய்த தூயநற் றவத்தில் வந்து
விற்பன விவேகங் கல்வி விளங்கறு முகவனுமே.



சான்றநகர் மகா-ள-ள-ஸ்ரீ உ. அழகப்ப நாடாரவர்கள் குமாரர்

### மகாலிங்க நாடாரவர்கள் இயற்றியது.

எத்திசையும் பணிந்தேத்துஞ் சதுர்வரையின் வடபுறத்தி லிலங்கிநாளும்
நற்றவச் சான்றோர்நகரிற் சுப்பயவே ளீன்றெடுத்த நளினயோகன்
சொற்றமிழா லாறுமுகம் வள்ளியம் மானையெனச் சொல்லக்கேட்டு
நற்றவரு மாதவரு மியாவர்களும் வியப்புற்றார் கருணை கொண்டே.

கரிசல்மாநகர் வித்தியாசாலை தலைமையாசிரியர் மகா-ா-ா-ஸ்ரீ

## அப்பாத்துரைக் கவிராயரவர்க ளியற்றியது.

சங்கரிக்கு மருமகனு மங்கமிலா வங்கசளின றந்தையான
சங்கரிக்கு மருமகனு மங்கடல்செயுஞ்சூர் தலைகளெல்லாம்
சங்கரிக்கு மருமகனு மங்களாயா கந்தனக்குத் தலைவனெனெஞ்
சங்கரிக்கு மருமகனு மங்கவன்மச் சான்மனைமேற் சமைத்தான்மாலை.

பூமலியும் பூமார்ப னுமவன்ற னுமமதைப் புகலவா மென்று
மாமலியும் மன்னவர்க டிருப்பதியி லனுதினமுமகிழ்ந் துவாழ்வோ
னாமலியும் பலகலையு நாமகடன்மனநாண வாய்ந்தே நன்னூற்
பாமலியும் படிபகரு மாறுமுக னென்றிடும்பா வலவனேறே.

---

கல்லுப்பட்டி மகா-ா-ா-ஸ்ரீ

## பு. நரசிம்மாச்சாரியா ரவர்கள் இயற்றியது

சான்றோர் குலாதிபனும் தகமைபெறுஞ் சுப்பயவேள் தவத்தினாலே
யீன்றெடுத்த புத்ரசிகா மணியென்ற வாறுமுக மியற்றுங்காதை
ஆன்றோர்க ளருளுடையோ ரகமகிழும் வள்ளியம்மை யணங்கின்பாடல்
வானமீருயு மமரர்களு மிதுநலல கவியென்றே வழுத்தினரே.

---

பெரியகுளந்தாலூகா ஆண்டிபட்டிக் கிராமம் போடிதாசன்பட்டி,
ஜோதிடவித்வான் மகா-ா-ா-ஸ்ரீ

## A. சின்னச்சாமி ஆச்சாரியா ரவர்கள் இயற்றியது

திருமருவும் சதுரவரை மாலிங்க முறுபழனச் செயநன் னாட்டிற்
றிருமருவும் காமயநன் னரசுறுமா தனிச்சான்றற் றிகணல் லூரிற்
றிருமருவும் சுப்பயவே டருபால னாறுமுகத் திலகன் சொற்றத்
திருமருவும்குறவனிதைக்காதையையம்மானையதாய்செப்பக்கேட்டு

கலைமகட வன்சரச மொழிகடுரை விடத்தொளிந்தாள் கமலமாது
கலைமகட வனசரசத் துளபமணி மார்பத்னிற் கனிந்தாள் வெட்கிக்
கலைமகடவனசரசக்குடமுனிநற்குஜதிசையைக்கவர்ந்தான்வெற்பிற்
கலைமகட வனசரசச் சரன்றிகழும் குகன்மகிழ்ந்து காப்பதானன்.

தேனியிலிருக்கும் சாப்டூர் மகா-ா-ா-ஸ்ரீ
முருக நாடாரவர்கள் குமாரர்
**சண்முகவேல் நாடாரவர்கள் இயற்றியது**

சதுரகிரி நிழல்பரவுந் திருவுலவும் சான்றோரின்
நகருறையுந் தக்கோர் மெய்க்கும்
அதிதவத்தோர் கொண்டாடும் வில்லேசு முன்சீப்
பாறுமுகன் வள்ளியம் மானைப்பா
கதிதருநல் லமுதமெனப் புகன்றானே யெழுகடல்சூழ்
புவியோர்கள் கனிந்து பாட
நிதிபெருகும் விதிதருகும் கீர்த்தியுறும் நீலநிற
மயிலனருள் நிலைக்கு மாதோ.

---

சாப்டூர் போஸ்டுமாஸ்டரும் உபாத்தியாயருமாகிய
மகா-ா-ா-ஸ்ரீ
**சுப்பய மணியகார ரவர்க ளியற்றியது**

சீர்பெருகும் சதுரகிரித் தென்மருதூர் நாகயவேள்
சிமேறு நாட்டில்
ஏர்பெருகும் சான்றநகர்ச் சுப்பயவே ளீன்றெடுத்த
எழிலின் மிக்க
பேர்பெருகும் ஆறுமுகம் வள்ளியம் மானையெனப்
பிரிய மாக
கார்பெருகும்புவிமீதி லுரைத்ததைக்கேட்டெல்லோருங்
களித்தார் மாதோ.

---

சின்னக்காளாம்பட்டி மகா-ா-ா-ஸ்ரீ
**அ. தங்கசாமிக் கவிராயரவர்க ளியற்றிய**
**எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.**

பொன்னிடை பிறந்து மணிகளிற் கிடந்து
பொக்கிஷத் திருந்திதத் தூர்ந்து
நன்னயத் துறையி னின்று நீடூழி
நல்லற வழிகளில் நடந்து

பின்னையின் றிருவா னனத்திடை வளர்ந்து
பிறங்குசா ரூர்நகர் வாழும்
மன்னன்சுப் பயவேள் சுதனறு முகவன்
வழுத்தின னொருதமிழ் நூலே. (1)

நூலெனிற் கம்பன் குருமுனி முதலோர்
நுவன்றிடும் பாக்களா யிலங்கும்
பாலினைக் கடைந்து பச்சனை யுருக்கிப்
பண்புறு நெய்யினைத் தெளித்து
சேலினைப் பழித்த விழிக்குறச் சிறுமி
சேர்த்தனுக் களித்த தேன்றினைமா
மேலுறச் சொரிந்தவ் விருவரின் மணத்தை
விரவினன் சருக்கரை மொழியால்

மொழியெனின் மதுரம் பெருகுசொல் லதனல்
மொய்ம்புடைக் குகன்வடிய யினோர்
விழிதிகழ் வள்ளி யம்மையைப் புனத்தில்
விருப்பொடு மணந்தநற் கதையை
செழியவம் மானைத் தொடையினி லிசைத்தான்
தெளிந்துநாற் பயனையு மடையும்
வழியிதென் றறிஞ ரெவர்களும் புகழ்ந்தார்
வானவ ரமிழ்தென மகிழ்ந்தார்



**சாத்துக் கவிகள் முற்றுப்பெற்றது.**





உ

சிவமயம்.

# வள்ளி நாயகி அம்மானை.

## விநாயகர் துதி.

### விருத்தம்.

சீர்சிறந்த திருத்தணிகைத் தலத்தின் மேவும்
சிவசுப்பிர மண்யர்திரு நடனஞ் செய்து
வாரணிந்த குவிமுலைப்பெண் வள்ளிகூட
மாபுனத்தி லேநடந்த சரிதைதன்னை
பார்தனிலே அம்மானையாகச் சொல்லப்
பதமெனக்கிங் கருள்புரிவாய் பரமனீன்ற
கார்நிற்றது மும்மதத் தைங்கரனே தொந்திக்
கணபதியே ஒருமருப்புக் கணேசதேவே.

## அம்மானை, தெய்வ துதி.

மந்திரஞ்சேர்வேலன்வள்ளி மணந்ததையம்மானைசொல்ல
சுந்தரவிநாயகனார் துணைமலர்த்தாள்காப்பாமே
காலனைக்காலாலுதைத்துக் காமன்தனையெரித்தும்
ஆலவிடமுண்டோனே யருளாளாமுன்னடவா
மலையைக்குடையாய்ப்பிடித்த மாதவனேசீதரனே
கலையைமிகவொளித்த காரணனேமுன்னடவா
சூரர்மார்பனைத்துத் திறக்கவடிவேலெறிந்த
வீரனேயித்தமிழ்க்கு வேணவரம்யருள்வாய்
ஆதிபரமேஸ்பரியே அகிலாண்டநாயகியே
பாதிமதியணிந்தோன் பத்தினியேமுன்னடவா
திருமாலின்மார்பிலுறை செந்திருவேயென்தாயே
அருமையுடனித்தமிழ்க்கின் கன்பமனேவர்தருள்வாய்

வெண்டாமரையாளே வெள்ளைசிறத்தஞ்சுகமே
மண்டலத்தோர்தான்புகழ வாக்கிசைந்தருள்வாய்
என்குலத்தைக்காக்க எழில்செந்திலம்பதியில்
பொன்னுவண்டையனென பூருவத்தில்வந்தவரே
பாசில்லாவள்ளியெனும் வஞ்சிகதையான்பாட
தேசிகனே யித்தமிழ்க்கு சீருள வாருமய்யா
எண்ணுமெழுத்து மிசையாய்வளர்ந்தெனக்கு
கண்ணாகவேயிருந்து காத்திடுவீரெல்லோரும்.

## அவையடக்கம்.

### விருத்தம்.

இப்புவி தன்னில்வேத வியல்புள்ள புலவோராய்ந்து
தப்புறு மொழியீதென்று தன்னுளத் தறிந்திட்டாலும்
வெற்பை யூடுருவவெய்த வேலவன் கதைதன்னை
ஒப்பறு மொழியீதென்று வுலகத்தோர் கொள்ளுவாரே.

### அம்மானை.

பண்ணிசைகள்பாடும் பாவலர்கள்தங்கள்முன்னே
எண்ணுமெழுத்து மியல்பொன்றுமேயறியா
சிறிபேதையுரைத்தபுன்சொல் செந்தமிழால்மேன்மைபெற்ற
பெரியோர்களெல்லாம் பிழைபொறுக்கவேண்டுகிறேன்
கற்பும்வடிவுமுள்ள கன்னியர்கள்வாழ்நகரில
பொற்புநிறையில்லாத பூவையர்கள்வாழ்வதுபோல்
தடாகமதிற்கமலந் தான்பூத்திருக்கவங்கு
விடாமலிடைக்கிடையே வெண்கொட்டி பூத்ததுபோல்
கானகத்திலேமயிலும் கார்மேகம்பார்த்தாட
வான்கோழியவ்வண்ணம் மகிழ்ந்துநின்றாடுதல்போல்
பாங்கிதுபாரவும் படத்தைவிரித்தாடவெதிர்
சாங்கருபவன்னம் நடித்திடும் பாவனைபோல்
சொன்னேன்முருகன் தூயகதையானதினால்
என்னபிழைகண்டாலும் இகழார்பெரியோர்கள்

## ஆக்கியோன்.

பூமாதுவாசம்பொருந்துஞ் சானோர்நகரில்
பாரிசநன்[illegible]வழிக்கிருக்கும்

விருத்தம்.

பங்கயத்தண் டாதரவில் சக்கினங்க
ளீற்றுனையும் பழனஞ் சூழ்ந்து
எங்குமகதி புனல்பெருகி வளமிகுந்த
தென்மருதூர் சிறைவ னாட்டில்
செங்கைமுளக் கொலைபதிர குரவையிட்டு
நடுகைகடச் சேர்த்து கூட்டி
சங்கையுடன் மள்ளர்களும் மனமகிழப்
பள்ளியர்கள் தான்வந்தாரே.

அம்மானை.

வந்தபொருமள்ளியர்கள் மன்னர்மனக்களிக்க
கந்தமிகும்பூமாலை கழுத்தில்மிகச்சொருகி
தென்மருதூர்க்காமயவேள் திரனுடைநன் னாட்டில்
புன்னகையாய்க்கைகொட்டி பொங்கிக்குறவையிட்டு
மங்கைப்பருவ மடந்தையராம்மள்ளியர்கள்
செங்கையால்நெல்நாற்றை சீராகவேநடவு
திருத்தியேநெல்பயிர்கள் சீராய்க்கதிர்வாங்கி
விருத்தியாய்த்தான்விளைந்து மிகவேகதிராறுத்து
சனாகிரிபெனவுஞ் சக்கிரவாளமெனவும்
குதாகுலமாய்த்தான்குவித்து குஞ்சரம்விட்டேயடித்து
காற்றில்பொலிதூற்றி கழியும்பதர்மாற்றி
மாற்றில்லாநெல்லை வண்டிகளிலேயேற்றி
அம்பாரமாயவர்கள் அவரவர்கள்வீடுகளில்
திரம்பரையில்த்தான்போட்டு சொகுசாகவேதானும்
அன்னதானமுதலாய் அநேகமானதானங்களும்
சொர்னதானங்கொடுத்து சுகமாகவாழ்ந்திருப்பார்
மாவும்பலாவாழை வளர்தெங்குமெய்யாவும்
காவில்வளர்சந்தனமும் கமுகுமுதலான
தருவோங்கிவானளவு தாவிக்கனிபழுத்து
மருவாசம்வீசும் மருதூர்நன்னாடதனில்

நகரச்சிறப்பு

மாளிகையாவிலிற்றும் மாளிகையுமேடைகளும்
ஆனதகிரைகட்டும் அழகியபந்திகளும்

ஒயிலாட்டமதுவதனை வுண்டாக்கித்தப்பாமே
மயில்தோகைதான்விரித்து மாயிலைச்கித்தாளும்
சுதமப்பலாமாநாவல் கனியிலுருசாறுடனே
இதமுறுசெந்தேன்கள்கலந் தேகமாய்த்தான்சேர்ந்தே
மாரியதுவியென வரிவரியாய்த்தாமோடி
வாரிகிர்வாவி மடுச்சுனையெலாய்ப்பெருகி
தடாகமெலாநிறைந்து தாமரையுமல்லிகளும்
விடாமலிடைக்கிடையே விரியலர்கள்பூத்திருக்கும்
சதுர்வரைகட்டாரிதாக சாமிநேத்திர தரை
மதுரமிகுங்கீர்த்தி வளர்வதைப்போலவளர்ந்து
காவனத்திலேயிருந்து களிகூர்ந்தவண்டினங்கள்
பூவதனிலேமதுவை புசித்துங்கிதமிசைக்கும்
மூங்கிலடர்ந்தேவளர்ந்து முத்துகளுந்தானுதிர்ந்து
பங்கினியபன்னகத்தின் பருமணியைப்போலெனவே
தடாசக்கரையருகில் சங்கினங்களீன்றமுட்டை
விடாதபடிமுத்துவித்து விண்ணுடுக்கள்போலிலங்கும்
தேவலோகமங்கையர்கள் தீர்ந்தம்திளைந்தாடி
காவனத்திலேமலரை கரத்தால்கொய்தேகுவரே
கானகத்திலானைகளும் கன்றுகளும்பிடியும்
வானளாவநிற்தடர்ந்த மரக்கொம்பினையொடித்து
கனிரசமேறடுந்தனைகள் சால்கள்வழுதுமென்று
இனிதாகக்கொப்பூன்றி யெறிந்துவிளையாடிநிற்கும்
சிங்கமுடன்யாளி சிறுமான்வேங்கையுடனே
பங்கமில்லாப்பூனைகிளி பாரில்ராஜாளிகொக்கு
கிரியும்பாப்பும் கெடுக்கோபமாய்முதலாய்
பாரிலிவைகளெல்லாம் பகையில்லாமல்வாழும்
கனியுங்கிழங்குகளும் காவனத்தில்தேன்களையும்
முனிவர்முதலோர்புசித்து முசியாமல்வாழ்ந்திருப்பார்
வேடுவர்கள்நாள்தோறும் வேட்டைமிகப்புரிந்து
காடுவெட்டித்தினைவிதைத்து காய்கனிமூலம்பறித்து
தேனுடனேமாவும் தித்திக்கத்தான்சேர்த்து
மானுடனேபுல்வாய் மடப்புறுபக்ஷிகளை

கரிசனைத்து நின்றிருப்பார் கான்வேடரெல்லாரும்
வெறியாடல்செய்தவர்கள் விடுதியிலே வாழ்ந்திருப்பார்

## சிவமுனிவர் தவம்.

### விருத்தம்.

சிவமுனி தவத்தில்மேவிச் சித்தத்தை யோர்மைசெய்து
பவமதை விலக்கவெண்ணி பரமனார் பதத்தைநாடி
கவனமா யிருந்துகங்கா தரனேகங் காளாவென்று
தவமது புரிந்துநாளும் தானிஷ்டைசெய்கின்றாரே

## அம்மானை.

அந்தவனந்தனிலே பெரியசிவமுனியும்
சிந்தைதனிற்பரம சிவனைத்துதிக்கவென்று
சடையுஞ்சடைமுடியும் தண்கமண்டலமும்
உடையப்புலித்தோலும் ஒருகரத்தில்செம்பிரம்பும்
வெண்ணீறணிந்து விதவிதமாய்ருத்ராக்ஷம்
நண்ணியதர்ப்பாசனமும் நற்பர்ணசாலையிலே
ஒருகால்பெருவிரலை ஊன்றிவடமுகமாய்
மறுகால்முழந்தாள்மேல் வைத்திரண்டுகண்மூடி
கதிரைக்கவர்வதுபோல் கரங்கள்தனைநீட்டி
சதுராகநிஷ்டையிலே தானேவுறுதியதாய்
பாசந்தனையகற்றி பரமபதம்சேருதற்கு
ஈசன்றனைத்துதிக்க யியல்பானிஷ்டைசெய்தார்
சங்கரனேசம்போ சதாசிவனேபரனே
பொங்கரவம்பூண்ட புலித்தோலுடையோனே
ஈமகடச்சோதி யீசாவெனப்பலவும்
காமதகனனென்னும் கடவுளைத்தானினைந்து
தவத்திற்சிவமுனியும் தானேயமர்ந்திருக்க
சிவத்தின்செயலாலேமுனம் செய்கைநடப்பதற்கு
பருத்திவிழிசுழன்று பார்க்குவிழிநோக்குடனே
சிறுத்ததலைநீழ்காதும் செம்புள்ளிபொன்னிறமாய்
செறிந்ததசையதுவும் செற்றியிலேநற்சுழியும்
குறுகினகால்களுடன் குருவால்சிறுகுழம்பும்
கண்டவர்கள்தான்புகழ்ந்து களிக்கும்படியாக
மண்டலத்தோர்தான்புகழ மான்வந்ததம்மானை

சிவமுனிவர் தவம்.



முனிவன்றவநிலைமுன் மூர்க்கமுடன்மானதுதான்
தனியாகஅங்குவந்து தழைத்தபசும்புல்மேய்ந்து
காலமிகவேதூக்கிகதித்துக் குதித்தேதான்
வாலமிகக்குழைத்து மானும்விளையாடிடவே
காமவிகாரமுடன் கருதியேசிவமுனியும்
நேமநிஷ்டைவிட்டு நிலைகலங்கிகண்விழித்து
தவநிலையைதான்மறந்து தானேபுலன்கலங்கி
மவுனங்குலைந்து மதிமருண்டுமோகமுற்று
மேனிவிதியால்ப்பார்த்து விபரீதமாமுனியும்
மானைமிகமோகமதாய் மருவிப்புணர்ந்தனரே
மாமோகந்தீர்ந்தபின்பு மடுப்புனலிலநீராடி
தாமோதரனயனும் தான்தேடிக்காணாத
முக்கட்பகவானை முனிவன்முன்போல்நோக்கி
தக்கமுயற்சியுடன் தானிருந்தார்நிஷ்டையிலே

விருத்தம்.

நிஷ்டைக்கி முனிவன்செல்ல நெடியமால்பெற்றகன்னி
இஷ்டமாய்வேலர்தம்மை யிணங்கவேதவங்கள்செய்தே
அஷ்டலக்ஷிமியைபோலே அணிதனைமிகவேபூண்டு
கஷ்டமில்லாமல்மானின் கருவதில்புகுந்திட்டாளே

அம்மானை.

நிஷ்டையிலேதானிருக்க நெடியோன்றன்பெற்றகன்னி
இஷ்டமுடன்வேலவரை யிணங்கத்தவமிருந்து
பெண்மான்வயிற்றில் பிரவேசித்தேயிடவே
மண்ணுண்டோன்தன்மகளும் மான்வயற்றிலேகியபின்
மானவ்விடம்விட்டோர் மதுவனத்திலேபுகுந்து
கான்வரையில்புல்மேய்ந்து கருதிப்புனலருந்தி
சிலகாலஞ்சென்றபின்பு சினைமுற்றிச்சூலுளைந்து
மலைவேடர்கிழங்கெடுத்த வள்ளிக்குழிதனிலே
ஈன்றதுபெண்சேயை யிளமானுமப்போது
மான்றுபில்போல்சேயதனை மானதுவும்பார்த்தவுடன்
கருங்கூந்தல்மீதினிலுங் காதிலணிகளையும்
சருவாபரணமுத்துத் தாவடமாலைபலதும்

தண்டைசிலம்புவளை சதங்கைகொலுசுடனே
மண்டலமெல்லாம்புகழ மனிதர்வடிவாயிருக்க
தன்னிணையில்லாததினால் தங்காமல்வேர்வனத்தில்
கன்னிமடமானுங் கடுகியேசென்றபின்பு
வள்ளியிலைகளைந்த மதலைதனைமூட
தள்ளிக்கைகாலுந் துடித்துத்துடித்திடவே
இன்னரயாழின் கிளிப்பசுவியோசையைப்போல்
அன்னவாகனன்தேவி யம்மையிசைபோலும்
பாலமுதுண்ணாமல் பசியினாலே வருந்தி
கோலவிழிப்பெண்ணமுதுங் கூவாக்கூவாவெனவே

வள்ளிநாயகியைக் கண்டெடுத்தது.

விருத்தம்.

குழவிதா னழுத சத்தம் குறிப்புட னாசன் கேட்டு
மழமழ வென்றேவந்து வலிய வில்லதனைப் போட்டு
பழவினைப் படியே யீசன் படைத்த பெண் தன்னைக் கண்டு
கிளர்ச்சியா யெடுத்தானந்தக் களிப்பவே யாடினானே

அம்மானை.

செழுமேலப்பாடியெனுஞ் சிற்றூரின்ராஜேந்திரன்
பழுதில்லாவேடன்நம்பி பாவைநங்கைமோகினியும்
இன்னஞ்சிலவேடர்கள் யெரியிட்டியம்புடனே
சின்னவில்லும்பெரியவில்லும் சேர்ந்தவளைதடியும்
மான்வலையும்நாயனைத்தும் வார்ப்பூட்டியேபிடித்து
கன்றேய்மான்புல்வாய் காடுமுயல்பன்றிகளும்
வேட்டைமிகப்புரிந்து விருதுகொம்புதான்முழக்கி
பாட்டையருஞ்சாய்புனத்தை பார்க்கவரும்போது
குழவியழுதகுரல் குயிலிசைபோல்தான்கேட்க
மழமழவென்றேநடந்து வனவேடராசனுமே
பெண்குழந்தையைக்காண பேரானந்தத்துடனே
திண்புயத்தில்சேர்ந்திருந்த சிலையுமம்பைக்கீழ்ப்போட்டு
சந்தோஷமாகவேதான் தன்கரத்தாலேதூக்கி
முந்தவேயீசன்முறைப் படியேபெண்குழந்தை
கிடைத்ததெனத்தான்மகிழ்ந்து கெம்பீரமாகவேதான்
மடக்கொடியாள்கையில் மகிழ்ந்துகொடுத்தனனே
மங்கையவள்தான்வாங்கி மாதம்பத்தானதுபோல்
கொங்கைபசுநரம்பும் குமிழ்க்கருக்குளிக்க

கன்னிமனங்களித்து காத்தவணைத்துமுத்தமிட
தன்னியம்தான்பொலிய தான்குழவிபாலருந்த
பிறவிக்குருடனுக்கும் பேணியதெய்வமது
விரலிலேகண்கொடுத்த விந்தையெனத்தான்மகிழ்ந்து
வேடர்மகிழ்ச்சியுடன் வேடிக்கையாக்கைகள்கொட்டி
கூடவேகைகோர்த்து குறவர்குலமாய்த்தேவாட்டம்
ஈடித்தானந்தத்துடனே நாதா நாதா வெனவும்
படித்தார்களாரபார முடன்வேடுவர்கள்
வேலா வேலா யெனது மிக்கமுள்ளசுர்த்தாவே
கோலாகலாபமயில் குகவேளேயென்றிறைஞ்சி,

"வள்ளிநாயகியை எடுத்து சிற்றூருக்குக் கொண்டுபோனது"

விருத்தம்.

சித்தமும் மகிழ்ந்து வேடர் சிறுபறை முழக்கவே தான்
மெத்த வானந்த மாக வேடர்கோன் புடைகள் சூழ
கொத்தலர் வாசமேலிக் குலவிய புனத்தைவிட்டு
பத்தமதாக மேலப் பாடியிற் புகுந்திட்டாரே.

அம்மானை

சிறுபறைகள்கொட்டி செவிடுபடக்கொம்பூதி
தருவரையும்தான்கடந்து தாமேமுழக்கமுடன்
மெத்தச்சந்தோஷமதாய் வேடுவர்களெல்லோரும்
பத்தமுடன்மேல்ப் பாடிவந்தாரம்மானை.
ஆனந்தமாகவேதா னாறுமுகவேலவனை
தானந்தமாய்த்துதித்து தையலுக்குநீராட்டி
நெற்றிதனிலழகாய் நீலவர்ணப்பொட்டுமிட்டு
சத்திவேல்போல்விழிக்கு தனிக்கருப்புமையெழுதி
மாகதம்போல்வஞ்சி மாலோன்மகள் தனக்கு
குறவர்குலராசன் கோதையந்தநாயகிக்கு
சித்திரைக்குத்தொட்டிசெய்ய செடுங்கரியின்கொம்பெடுத்து
பத்திபத்தியாய்ப்புலியின் பற்கள் தனைப்பதித்து
கலக்கொம்பினிலே கடசல்துமிழமைத்து
அலங்காரமாய்ச்சேர்த்து அணியாய்மயிலிறகை
பக்கத்திலேபிணைத்து பாயல்புலித்தோல்விரித்து
திக்கெல்லாந்தொட்டியிலே செம்பாம்பினன்மணியுக்

ஆனையின்கோட்டுமுத்து மலங்காரமாய்த்தூக்கி
மானைப்போற்சேயிழையை மனதுமகிழ்ச்சியுடன்
சீராட்டிப்பாராட்டிச் சித்திரப்பூந்தொட்டிலிட்டு
தாலாட்டிமுத்தமிட்டுச் சத்தமிட்டுத்தான்பாடி.
தாலாலோதாலாலோ தையலரேதாலாலோ
வேலாமெனும்விழியாய் மெல்லியரேதாலாலோ
பொன்னேநவமணியே பொற்கிளியேஆரமுதே
அன்னமேசெந்தேனே அருமைவனக்குயிலே
கன்னியில்லாவாசனுக்கு கண்டெடுத்தரத்தினமே
மின்னிப்பரவுமெழில் மிகவொளிரும்பெண்ணரசே
கலிமைவிரட்டவந்த காரிகையேநித்திரைசெய்
நலியாமலென்குலத்தை ரக்ஷிக்கவந்தகண்ணே
தரைமீதுகான்கிடந்த தங்கமேபெண்மணியே
குறைகளொன்றுமில்லாமல் கோதையரேகண்ணுறங்காய்
சகலநகைபூண்டு தான்வந்தகண்மணியே
பகலவனைத்தானிகர்த்த பாவையேகண்ணுறங்காய்
நகைமுகமாய்த்தாலாட்டி நங்கையுந்தொட்டிதனை
வகையாகஆட்டிடவே மங்கைநித்திரைசெய்தனளே
நித்திரைவிட்டெழுந்த நேரிழையின்தன்முகத்தை
பத்திமிகுஞ்சிந்தையுடன் பாவைநங்கைபார்த்திருக்க
பக்கக்குடிசையுள்ள பாவையருமாடவரும்
மிக்கமுடன்சேய்கிடைத்த விதங்கேட்டுயாவர்களும்
ஆடவரும்பாவையரு மதிசயமாய்த்தான்கூடி
வேடச்சிறுவர் விளையாடுங்கன்னிகளும்
நரைதிரையுங்கூனல் நடுக்கமுடன்கம்பூன்றி
முறைமுறையாய்முன்னம் முதுமொழியுந்தான்கூறி
தொண்ணூறும்பத்தும் தொடர்ந்தவயதுள்ளவரும்
மன்னனம்பிராசன் மனைக்குவந்தாரம்மானை.
வந்துமேயெல்லோரும் மான்வயிற்றிலேபிறந்த
சுந்தரரூபமுள்ள தோகைதனைப்பார்த்தார்கள்
பார்த்துச்சந்தோஷமுடன் பாவையருமாடவரும்
ஆர்த்திடவேயவர்களானந்தங்கொண்டாடினரே

பச்சரிசியஞ்சனுடன் பாங்காகவேகுழப்பி
அச்சதையிட்டல்லோ வருள்திஷ்டி தான்கழித்தார்
தினைமாவைத்தானிடித்து தேனுடனேபிசைந்து
மனைதனக்குவந்தவர்க்கு வழங்கினார்சர்க்கரைபோல்
கள்ளுடனேசாராயம் கஞ்சாவின்லேகியமும்
சள்ளுடனே துவையல் தெரிந்தமுடன்தானருந்தி
வெறியாடலாய்நடித்து வேடிக்கையாய்கைகோர்த்து
சரியாகவாண்பெண்ணும் தானங்கேயாடினரே
ஆட்டுக்கடாய்பிடித்து அதன்கொம்பில்பூச்சூடி
சாட்டுப்பொங்கல்முழுதுந் தான்வைத்தார்தேவதைக்கு
பலிகள்மிகக்கொடுத்து பேரானந்தத்துடனே
கலியைமிகத்தீர்க்கவந்த கன்னிக்குப்பேருவைக்க

## பெயரிடுவது.

முருகன்றனக்கு முப்பழமுந்தேன்மாவும்
வருக்கப்பலாச்சுளையும் வைத்துமேபொங்கலிட்டு
பாலசுப்ரமண்ய பகவானைத்தோத்தரித்து
ஞாலத்தோர்தான்புகழச் சந்தோஷமாகவேதான்
விருந்துஇனத்தார்க்கு வேண்டபக்ஷணத்துடனே
அருந்தும்படியேசெய்து அளித்தாரடைக்காய்களுமே
உரியோர்பெரியோர்க ளொருமித்தானந்தமதாய்
பரிவாகவேலவரைப்பணிந்துமே நாமமிட்டார்
தொடுகுறிதான்பார்த்து தோகையற்குப்பேருவைக்க
வடிவில்லாக்காரணத்தின் வாய்த்ததொருபேரை
வள்ளிக்குழிதனிலே வந்துபிறந்தவட்கு
ஒள்ளியமாய்வள்ளியென உரைத்தார்கள்காணவரும்
மெய்தடவியுத்தமியாய் மேல்வயதுவாழ்வுடனே
மைவிழியாய்நீயுமுயர் மங்கிலியத்தோடிருப்பாய்
முன்பிறக்கும்போதிருந்த முத்துமணிமாலையுடன்
பன்னகத்தின் நன்மணியும் பலசங்குத்தாவடமும்
பூட்டினாரந்தப் பொற்கொடியாட்கப்போது
காட்டின்வனவேடர் களித்தேயவரவர்கள்
குடிசைதனக்கேகினரே கோதையர்கள் தங்களுடன்
படிமிசையேயந்தப் பாவைவள்ளிநாயகியும்

சப்பாணிகொட்டித் தவழ்ந்துவிளையாடி
தப்பாமல்தள்ளாடி தானேநடைபழகி
பேச்சுகளும்நன்றாய் பேசிவயதைந்தாகி
ஆச்சியசோதைவிட மாயன்வளர்ந்ததுபோல்
ஐந்தாகியாறாகி அடுத்தேயேழெட்டுநவம்
மெய்வயதுபத்தாகி வேல்விழியாள்தான்வளர்ந்தாள்
பன்னிரண்டுவயதடுத்து பாவையர்க்குவந்ததுவே
கன்னியனைப்பார்த்து களிகூர்ந்துதானிருந்தார்
குடிசையாகில்நின்ற குளிர்வேங்கைமரத்தில்
வடிவுள்ளதோழியுடன் மங்கைவிளையாடிநிற்பாள்
பலவாகாய்த்தாலும் பாரில்மணல்வீடுகட்டி
நிலவின்சோறாக்கியவள் நித்தம்விளையாடிடுவாள்
தேன்போல்மொழியாளே தித்திக்குமாரமுதே
மான்சாயல்பெண்ணரசி மதிபோலேதான்வளர்ந்தாள்
கோதில்லாவள்ளியெனும் கோதைப்பருவமடைந்தாள்
சாதிமுறைப்படியே சடங்குமிகச்செய்தனரே.
நீதமுடனந்நாட்டில் நிதிகள்மிகவோங்கி
மாதமும்மாரிபெய்து மாநிலமெல்லாம்செழித்து.
குன்றவர்களெல்லோரும் கோடரிவாளுடனே
சென்றுவனமேகிச் செடிவெட்டிப்பூந்திருத்தி
புனத்தில்வழிப்பொசுக்கி பொளிபோட்டுக்கல்லூன்றி
தினையைவிதைத்தார்கள் சிந்தைமகிழ்வாக
மாரிப்பெருக்காலே வளர்ந்துபயிர்தானாகி
சூரியனைக்கவர்வதுபோல் துரிதமுடனேகதிர்கள்
தள்ளிவிளைந்துகதிர் தானேமணிபிடித்து
புள்ளினங்கள்மிருகமெல்லாம் புசிக்கக்கதிருகளை
இன்பமுடன்தின்றே இனியபசிதீர்ப்பதற்கு
கும்பல்கும்பலாகக் கூடிவந்ததம்மானை.
வேடுவர்களும்புனம்போய் வேட்டைமிகப்புரிந்து
காடுகள்பார்த்துவந்து காவல்மிகச்செய்வதற்கு
பாலினியபாகுமொழி பாவைவள்ளிநாயகியை
வேலினையொத்தவிழி மின்னார்கள்தங்களிடம்

அனுப்பவேவேணுமென்றே அரியகங்கைமோகினிக்கு
தனுவேந்தங்கையான் தமையன்மார் தங்களிடம்
கூட்டிவந்துவேடரசன் கோதைவள்ளிநாயகியை
காட்டில்தினைகார்க்க களிகூர்ந்தனுப்புமென்று
வினவியபோதவர்கள் விடைகொடுத்தானத்தமதாய்
மனதில்தயாளமுள்ள மாதாவுந்தானனுப்ப
தந்தையண்ணர்வேடருடன் தானேபுனமேவி
சிந்தையாயப்பரணமைக்க வேணசிறப்புடனே

பரணமைத்தல்

பவளத்தால்கால்நிறுத்தி பச்சைவளைபரப்பி
துவளாதமாணிக்கம் தொடுத்ததன்மேலேவிரித்து
காராணைக்கொம்பேணி கால்களுக்குத்தானமைத்து
சீராய்ப்பழுதுகட்டு செம்மானின்கொம்பமைத்து
சேர்த்துவைத்தஏணிதனில் சிறுகுமிழ்கள்சுள்ளாணிவைத்து
கோர்த்துப்பரஞ்சாத்தி வைத்தகோலப்படிதனிலே
பாதமதைவைத்துப் பரண்மீதிலேறிநின்று
சாதகமாய்நீயுமெங்கள் தாய்வள்ளிநாயகியை
பக்கத்திருக்கும்புனத்தைப் பாவையர்கள்காப்பதுபோல்
மிக்கமுள்ளதோழியுடன் மிருகம்பக்ஷிவாராமல்
கவணின்கயிற்றைவலக் கைவிரலில்கோர்வைசெய்து
நவமணிபோலுண்டைவைத்து நாடிவரும்பக்ஷிகளை
எறிந்துவிரட்டியிருந்திடுவா யென்றுசொல்லி
பொரிந்ததினைமாபலதும் பொசிக்கவேதான்கொடுத்து
மனதில்பயம்சள்ளளவும் வையாமலேநீயும்
தினைப்புனத்தைக்காவெனவே செப்பியேவேடுவர்கள்
காடுதனைவிட்டுமல்லோ குடிவந்தார்சிற்றூர்க்கு
வேடுவர்கோமானுடனே வீடுதிக்குபேகினரே
தந்தையுரைகேட்டுவள்ளி சந்தோஷமாய்மகிழ்ந்து
சிந்தையாய்ப்போட்ட பரண்மீதிலேதானேறி
யேணிதனில்பாதம்வைத்தே ஏறிவள்ளிநாயகியும்
காணித்தினைப்புனத்தைக் காத்திருந்தாளம்மானை.

## பரணேறித் தினைப்புனங்காத்தல்.

விருத்தம்.

வனத்தினில் வாழுங்கிள்ளை மயிலினஞ் சிட்டுக்காகம்
கனத்த மான் மிருகங்களை காவில்வாழ் செந்துயாவும்
தினைக் கதிர் தனைக் கொய்யாமல் திருமகள் வள்ளிதானும்
புனத்தினில் கவணெறிந்த புதுமையான் புகலுவேனே.

அம்மானை.

ஆலோலம் ஆலோலம் பச்சிகளேயாலோலம்
ஓலமிட்டுவச்சிரக்கல் லோயாமல்தானெறிந்தாள்
கைவளைகள் சத்தமிடக் காலிற்சிலம்பசைய
மெய்யெல்லாந்தான் குலுங்க வீசினாள் கைக்கவணை
மாடப்புறாவினமே வனக்கிளியேசிட்டுகளே
கூடவலசாரே கோகிலமேயன்றில்களே
தூக்கணனைபிதுலி குரவந்தான்பீளிகளே
ஆக்கமுடன்பறந்துவரு மாகாயம்பாடிகளே
காடைகவுதாரிகளே காகங்களேயானினமே
தாடைதெரித்துவிட தானெறிவேனாலோலம்
நாங்கணைவரப்புள்ளே நற்காணுங்கோழிகளே
தீங்கதிரைக்கொய்யவந்தால் தெரிப்பேனேயாலோலம்
சேவல்களேவான்பறவை செய்போத்துவிச்சுளியே
கானனத்துப்பட்சிகளே கவணெறிவேனாலோலம்
வனத்தின்மிருகங்களே வரையாடுசேனைகளே
கனத்தமான்முள்ளானே கவணெறிவேனாலோலம்
மன்றுள்நடமாடுமரன் மகன்றன்னருளாலே
என்றுசத்தமிட்டவளு மிருந்தாளிதன்மீது
வினையின்பயனாலே மேதினியெலாம்விளங்க
தினைப்புனத்தைக்காத்து திருவள்ளியங்கிருக்க

## சுப்பிரமணியர் திருத்தணிகை வந்தது.

விருத்தம்.

மந்திர கிரிகிகர்த்து வானதை யளாவி நிற்கும்
கந்தமா தனத்தில்வேலர் கன்னிதெய் வானையோடு
விந்தையாய்க் களித்தெப்போதும் வீற்றிருப்பதுபோலங்கு
சிந்தையில் மகிழ்ச்சியோடு திருத்தணி மலைவந்தாரே

## இதுவுமது.

திருத்தணி மலையில்வந்து திருவிளை யாடல்செய்ய
பொருத்தமாய் வள்ளிதானும் புனமதைக் காக்குங்காலம்
வருவத்தை யெதிரேபார்த்து மகிழ்ச்சியோ டிருக்கும்போது
பருவத்தை யறிந்துதேர்ந்து பகரநாரதர் வந்தாரே.

## அம்மானை.

அந்தவெள்ளிமாமலைக்கு அதிகமாய்த்தான்வளர்ந்து
கந்தமாதனத்திலென்றும் கன்னிதெய்வானையுடன்
அங்குதானெப்பொழுது மமர்ந்திருக்கும்பாவனைபோல்
இங்குபுறப்பட்டுவந்து எழில்மிகுந்தேசொலிக்கும்
திருத்தணிகைமேவித் திருக்கோவில்வீற்றிருந்து
மருக்கமழும்பூங்கூந்தல் வள்ளிதனைமணக்க
எப்பவருங்காலமென வெண்ணியேதான்வால
சுப்ரமண்யதேவர் துணிந்திருக்குங்காலமதில்
சடைமுடியும்வீணையொடு தண்டுடன்கமண்டலமும்
குடைகாவிச்சோமனுடன் கொடியபுலித்தோலும்
பாதகுறடணிந்து பரிவுடனேகண்டசெய்தி
ஓதவரம்பெற்றதவ முயர்நாரதமுனிவர்
தருவோங்கும்வெண்கயிலை சாருங்காசிமுதல்
திருவுலவும்பொதிகை தேசமொடுமெங்குவளர்
சிவதலங்களெல்லாம் சென்றுசென்றுயிசனது
தவவிரதம்பூண்டுசிவ சங்கரியின்தாள்பணிந்து
ச ரி க மா ப த நி யெனுந்தானேழிசைகளுடன்
விரிவாகவீணைதனை மீட்டியேதான்பாடி
கங்கையமுனைமுதற் கன்னியாகுமரிவரை
சங்கையுள்ளனேகநதி தன்னிற்புனலாடி
புள்ளினங்கள்தானுலவும் புனங்கள்நதிவளருதும்
வள்ளிமலைச்சாரின் வனத்தில்வரும்போது
வேலாமெனவிழியாள் மேனியின்தக்காசகத்தில்
ஆலோலமென்றசத்தம் அம்முனிவன்தான்கேட்டு
இன்னியோகோகிலமோ கிஞ்சுகமோயாழிசையோ
நன்னயமாய்கேட்பதைதான் நாடியறிவோமென்று

வரம்நிறைந்தமாமுனியும் வந்தாரேயந்தலத்தில்
பரண்மீதிருந்தயிளம் பாவையவரைப்பார்த்தளவில்
பூமாதோயிந்திரனார் பொருந்துமகாகன்னிகையோ
நாமாதோயாரனன்பு ரதியோவருந்ததியோ
என்றெண்ணித்தானும் யியல்ஞானதிஷ்டியினால்
நன்றாவள்ளிநாயகியை நனுகமுனிதான்மதித்து
மாலவன்தான்பெற்றகன்னி வடிவேலர்க்காகுமென்று
சீலமுடன்மாமுனியும் சிந்தைதனிலேதுதித்து
மாதவத்திலேமிகுத்த வரப்பிரசாலியெனும்
வேதமுனிநாரதனும் மிகவேமனதிலெண்ணி
சிவனார்குமரனுக்கு சேர்த்திவளைவைப்போமென்று
தவமுனிவன்தான்நினைந்து தங்காமலேநடந்து
புள்ளிமயில்வேலரிடம் போகமனந்துணிந்து
வள்ளிமலைமற்ற வனங்களெல்லாந்தான்கடந்து
காடுவனமுஞ்செடியும் கடந்தியதாணடந்து
நாடுதனக்கேகியங்கு நடந்தாரேமாமுனியும்
வெய்யோனொளியொழுகா வேங்கைபுன்னைமாவனஞ்சூழ்
வையமெல்லாம்புகழு வானையளாவிநிற்கும்
திருத்தணிகைமாமலையில் சிவமுருகர்கோவிலுக்கு
ஒருமுகூர்த்தநேரமதி லோடிவந்தாரம்மானை
பன்னிருபுயாசலத்தைப் படைத்தகுமரேசர்தம்மை
நன்னிலமெலாம்பரவும் நாரதமாமுனியும்
மூக்காலவலம்வந்து முருகாகுருபரனே
தங்கவடியார்கள் தன்னிதயவாசகனே
சரவணபவாகுகனே சண்முகநாதாவெனவே
கரமதனைக்கூப்பிமுனி காரணனைத்தான்தொழுது
குமரகுருபரனே கோலாகலமுருகா
அமரர்தொழுந்தேவே யாசானேயோர்விண்ணப்பம்
கூடுத்தசபைதனில் அரியசிவமுனியும்
தொடுத்தசிரதமதாய் சுருதிமுறைப்படியே
மவுனதவமிருந்து மாதவனைக்காண
கவனமுடன்புரிய கன்னிவிமானமதுதான்

அதிகவடிவாக அவர்முன்னேதோன்றிபதால்
விதியினாற்காம வேதனையுண்டானதினல்
மானைமிகப்புணர்ந்து மடுப்புனலில்நீராடி
மோனதவமானை முன்போலேதான்புரிந்தார்
கருவதுதான்மான்வயிற்றில் காரணமாய்த்தரித்து
சிறிதுநாள்சென்றபின்பெண் சேய்தனையீன்றதுவே
தன்னினமில்லாததினல் தான்போட்டுவேர்வனத்தில்
பொன்னினெளிமானதுவும் போனபின்புவேடராசன்
எடுத்துவளர்த்துமவர் இனியவள்ளியம்மையென்று
வடுவில்லாப்பேரமைத்து வயதீறூர்சென்றபின்பு
பாலகுமாரத்திதனைப் பாங்கிமார்தன்னுடனே
மூலங்கனிகாய்சருகு முளைத்திருக்கும்வள்ளிமலை
சாரலிலேயோர்புனத்தில் தனியாய்ப்பரணமைத்து
காரமுள்ளபகூதிகளும் காவனத்தில்வாழ்மிருகம்
புனத்திற்றினைக்கதிரை புள்ளினங்கள்கொய்யாமல்
மனத்துணிவாய்க்காத்திருக்க மங்கைக்கரசிதனை
கண்டேனுன்சுவாமி காங்கையனேயென்றுரைத்து
விண்டேனம்மாதாவின் விபரீதசுந்தரமோ
மகாலட்சுமியிரதி வாணியிந்திராணியெல்லாம்
தகாதழகுயிம்மான் றனக்குவமைசொல்லவொண்ணு
அன்னநடையாள் அமுதொழுதமென்மொழியாள்
மின்னலிடையாள் வேல்போல்விழியுடையாள்
சொன்னமயமான சுடரேயிகத்துலக்கும்
வர்ணமயமான வடிவேமிகவுடையாள்
இப்போதுயானுரைத்த இனியவிண்ணப்பமதில்
தப்பொன்றிராதுஉண்மை தமியேனுரைத்தமொழி
கண்டுகளிக்கவல்ல காலமிதுதானெனவே
விண்டுவினாலுற்பவித்து வேலரேஉம்முடைய
பன்னிருபுயத்தணையப் பாவையாய்வந்தவளோ
இந்நிலத்தில்தவம்புரிந்து எனைச்சேரவேண்டுமென்று
தேவரீர்சொன்ன திருவாக்கால்வந்துதித்த
பாவைபோலதோணுது பக்வானேஎன்றுமந்து

வீணைவலதுன வேதமுனிநாரதரும்
நாணயமாய்ச்சொல்ல நாதர்வடிவேலவரும்
புன்சிரிப்புக்கொண்டு புளகமுற்றுத்தேகமெல்லாம்
அன்புடனேகம்மிடத்தே யறிவித்தசேதிகட்கு
சந்தோஷமாச்சு தவம்புரியும்நாரதனே
உந்தன்மனப்படியே ஓவியம்போலேயிருக்கும்
வள்ளியம்மைதன்னை மணம்புரியவேணுமென்று
புள்ளிமயிலேறும் புனிதவடிவேலவரும்
சொல்வதைத்தான்கேட்டு சுருதிமிகவறிந்த
வல்லதொருமாமுனியும் வடிவேலனைப்பார்த்து
உன்மனதின்படியே யுகந்துமேயத்தலத்தில்
நன்மையுடன்வள்ளிதன்னை நாடிவசப்படுத்தி
வரக்கடவாய்என்றுமந்த மாமுனிவன்தானுரைத்து
கரந்தனையேகூப்பி கடவுளேஎந்தனுக்கு
விடைதந்தனுப்புமென்றான் வீணைமுனிநாரதனும்
தடையொன்றுஞ்சொல்லாமல் சந்தோஷமாகவேதான்
அனுப்பினார்மாமுனியை ஆறுமுகவேலவரும்
இனிதாய்விடைபெற்றேகினார்மாமுனியும்
மாமுனிவன்தானேக வடிவேலர்மையலினால்
காமுகனைப்போலே கலங்கியேமெய்மறந்து
தானேயுருகியந்தத் தையலின்மேலாசைகொண்டு
கானேதிரிந்துஇடக் கையில்வில்லுமெடுத்து
வேட்டையாடித்திரியும் வேடராசன்புத்திரிதான்
காட்டைவிட்டுகோட்டில்வந்து களித்துவாழும்படிக்கு
திருவுளந்தானிரங்கிசெக சோதியானமய
சொரூபத்தைமாறி சுப்ரமண்யவேலவரும்
காமன்விடும்பூங் கணைக்குமிகவேமெலிந்து
தாமேகவலையிலே தயங்கிமிகவழுந்தி
பஞ்சபுலாதி பதறிமிகமயங்கி
செஞ்சடையோன்புத்திரனும் திகைத்துசனுவடிவாய்
வேதங்கள்தேடிமிகவே வணங்கிநிற்கும்
பாதமதில்வீரதண்டை பக்கமெங்குஞ்சத்தமிட
பூட்டியுடைதரித்து புனிதமுடன்கச்சைதனை
மாட்டியிருதோள் மார்பிடமெலாம்பூண

வாசமிகும்பூமாலை மணக்கமழத்தான்தரித்து
நேசமுடன்வில்லம்பு நேர்ந்தியதாய்க்கைபிடித்து
கார்மேகம்போலே கறுத்திருக்கும்கூந்தல்தனை
சீர்பெருகவேகொண்டை சேர்த்துமிகமுடித்து
கொண்டைதனில்வெளுத்த கொக்கிறகுந்தான்சூட்டி
வெண்டையஞ்சேர்காலில் மிதியடியுந்தானணிந்து
வேடுவரைப்போல்வடிவாய் வேலவருந்தானெடுத்து
காடுதனிலேயல்தனை காத்திருக்கும்பெண்மையலினால்
திருத்தணிகைவிட்டே சென்றனராம்வேலவரும்
மருத்திகழ்செந்தாமரைமென் மலரைமிகப்பழித்த
பாதாரவிந்தமது பாரிற்படித்தேசிவக்க
மாதாவிருக்குமந்த வள்ளிமலைச்சார்பருகே
மண்டலமெலாம்புகழ மாபெருமைதான்படைத்த
அண்டர்தவம்புரியு மடர்ந்தபருவதத்தில்
மெல்லமெல்லயேறி வெகுதூரந்தானடந்து
வல்லவருமந்த வளமிகுந்தகாவனத்தில்
பாலைமரமும் பலவிருட்சஞ்சூழ்ந்திருக்கும்
சோலைதடாகமுதல் சுனையுஞ்சிலகடந்து
கதிர்கள்விளைந்து களிக்கும்புனத்தருகே
எதிராகவந்து எந்திழையாள்வள்ளிதனை
கண்டார்பரண்மீது கரத்தில்கவண்பிடித்து
உண்டைவைத்துக்காட்டினங்க ளோடும்படியாக
பக்ஷிக்கூட்டங்களையும் பன்றிபுல்வாய்மானினமும்
எச்சினைந்துத்தானோடை யெண்டிசையுந்தானோக்கி
கண்ணால்மிகப்பார்த்து கவணுருண்டையாலெறிய
அண்ணாந்துபார்த்துநின்றார் ஆண்டவருமப்போது
வறுமைதான்வந்தவர்க்கு வையகத்தில்முன்புவைத்த
அருமைப்பொருள்கிடைத்தா லந்தமனிதனுக்கு
எப்படிச்சந்தோஷமதாய் இருப்பானதுபோல
அப்படியேதானிவரு மனந்தமாயவ்விடத்தில்
நின்றுமேதான்பார்த்து நெடியோன்திருமகளை
நன்றென்றுதானுமப்போ நாதன்மகிழ்ச்சியுடன்

செல்லப்பெருக்கே திரவியமேதெள்ளமுதே
நல்மகாரகந்தமதை நாடியசெந்தாமரையின்
மலர்மீதுவிற்றிருந்த மாலட்சுமிபோல
புலவர்தமக்கருளும் புத்தகஞ்சேர்கையாள்போல்
மேகந்தனிற்சுழலும் மின்னற்கொடிபோலும்
நாகாதிபன்சிரசில் நாகமணிபோலும்
சூரியனைப்போலே துலங்குஞ்சுடர்வடிவாய்
வாரிதனில்வந்த மதிபோல்முகத்தொளிவும்
மின்னைப்பழித்தயிடை மேனியழகுடைய
அன்னநடையும் அமுதனையபாகுமொழி
பெண்கள்சிகாமணியே பேதையிளங்குயிலே
நன்மையுடனிரங்கி நான்சொல்லும்நீதிகளை
உனதுசுந்தரவடிவ முன்னிலமைகண்டவுடன்
எனதுமனந்தாளவில்லை யேந்திழையேயாரமுதே
விண்ணோருலகினிலும் விடவரவின்லோகமதில்
மண்ணுலகிலுமுள்ள மங்கையர்க்குநாயகமே
என்றுபுகழ்வல்ல யெழில்ரூபம்தான்படைத்த
பொன்றுயிலைப்புனைந்த பூவையுன்னையேகமதாய்
கண்டபேரண்டம் கனத்ததொருசார்த்தூலம்
விண்டலமெலாம்நடுங்க வெள்ளிடிபோலேமுளங்கும்
சிங்கம்புலியானை செந்நாயகரடியுடன்
பங்கமேசெய்யும் பலமிருகம்சூழ்வனத்தில்
இந்தமலைமீது இளைத்ததினைக்கதிரை
விந்தையுடன்காக்க வேறுதவியில்லாமல்
தனிமையாய்க்காவல்வைத்த தாஷ்டிகனும்வேடருக்கு
இனிமையாய்வுன்னை ஏன்படைத்தானோபிரமன்
எப்படியானாலு மினியாவதொன்றுமில்லை
மைப்படியுங்கூந்தல் வாய்த்ததொருபெண்ணரசே
துலைதூரத்திலிருந்து துவளநடந்துவந்தேன்
மலையேறிவந்ததினால் மயக்கமிகவுண்டாச்சு
மதுரமொழியிசையும் மதிமுகத்தின்தோற்றமது
எதிர்பட்டபோதெனக்கு இந்தத்தலத்தைவிட்டு

வேறுதலம்போக விருப்பமதுண்டாகவில்லை
மாறுபாடாக மயக்கமுண்டாகிறது
நமதுமனங்களிக்க நற்பவளவாய்திறந்து
உமதுபேர்தன்னை யுரைத்துமிகவருளும்
பேருரைக்கவுந்தனுக்குப் பிரியமில்லாதிருந்தால்
சீருருன்றன்பதிக்கு சேரும்வழிதனையே
திருவாய்மலர்ந்தெனது செவிகட்கமுதாக
ஒருவாசகந்தா னுரைபெண்கள்நாயகமே
என்னுடையகேள்விக் கெதிருத்தாரம்புரிய
உன்மனந்தானிறங்கி யுரையாமல்தானிருந்தால்
எந்தன்மனகஷ்டதனை யெண்ணியெண்ணிவாடுகிறேன்
சிந்தைகளிக்கத் திருவேயுனதுநகை
முகத்தைத்தான்காட்ட முடியாதோபெண்ணமுதே
அகமதனிலன்புவைத்தே யரிவையரேயுந்தனது
சேற்கெண்டைபோல்ப்பிறழும் திருவிழியினாலேயெனை
பார்க்கவுந்தானாகாதோ பாவையேதேன்வாயாளே
உந்தன்முகத்தி னொளிவுகண்டமாத்திரத்தில்
எந்தன்மனங்கலங்கி யினியபொறிதான்சிதறி
காமக்கவலையிலே கஸ்திமிகவடைந்து
ஏமாந்துநிற்கு மெந்தன்மனங்களித்து
பிழைக்குமந்தமார்க்கமதை பேணியேகாட்டாமல்
இளைக்கும்படியாகக் கிருபைமிகப்புரிவாய்
என்னிடத்தன்புவைத்தி ரக்கம்பாராட்டாமல்
கன்னியேயிவ்வாரிருந்தால் கருமங்கள்தான்சேரும்
சத்தியமாய்ச்சொல்வேன் றபாதலத்திலெப்போதும்
நித்தியமுன்மீதுபழி நிலைமையாமையில்லை
பராமுகமாயிராமல் பார்த்துமேசீக்கிரத்தில்
வரமாகவெந்தனுக்கோர் வார்த்தைசொல்லவேணுமென்று
உலையில்மெழுகதுபோ லுருகியேவேலவரும்
வலையிலகப்பட்ட மானதுபோலேதிகைத்து
சுவனமுடன்வேடர் கன்னியின்மேல்மையல்கொண்டு
தவனமுடன்வேலவரும் தாளநகைவஞ்சியரை

வருந்திமிகக்கெஞ்சி மலர்க்கரங்களைநீட்டி
பொருந்திமிகவேமனதில் பூரணமாகவேதான்
பொறைகளில்லாதபடி பொற்கிளியாள்தன்னிடத்தில்
குறைவொன்றில்லாமல் குகவேறுநின்றனரே
இப்படியாய்வேல ரிருக்கும்தருணமதில்
மைப்படியும்சோலைநிறை மாபுனத்தில்தானிருக்கும்
வள்ளிதனக்கிதமாய் வழக்கமாய்நாள்தோறும்
தெள்ளியமாய்த்தேனும் திரட்டியபால்தன்னுடனே
கனிகாய்கிழங்கு களிக்கவேதான்புசிக்க
இனிதாகத்தந்தைபரு மின்பமுடன்கொண்டுவரும்
வழக்கப்படிவேடரசன் வருகிறான்சேனையுடன்
முழக்கமுடன்சிறுபறையை முழக்கியேகொம்பூதி
பன்றிகரடிபுலி பலமிருகம்யானைபக்ஷி
துன்றிவராதபடி துரத்தியேசத்தமிட்டு
சித்தூர்தனைக்கடந்து தினைப்புனந்தைத்தானோக்கி
சத்துகடல்போலிறைச்சல் காதிலேதான்கேட்டு
வருவதைத்தான்கண்டு வாலசுப்ரமண்யருமே
உருவமதைக்காட்டாம லுடனேமிகமறைந்து

விருத்தம்

வேதமதுநான்கினையும்வேரதாக்கி மிக்கசிவாகமத்தையடித்துண்டாக்கி
நீதர்மசாஸ்திரமுங்கலைக்யானத்தைநேர்மையுடன்கிளைகளிலேபூப்பிஞ்சாக்கி
ஓதரியகாய்கனிகளுடனேதானு மோங்கிமிகமேவளர்ந் துயர்விண்தாவி [முர்
போதமுடன்வேங்கைமரமாகத்தானும் புனத்திலேவேலவரும்பொருந்திநின்

அம்மானை.

வேதமதுநான்கினையும் வேரதுவுந்தானாக்கி
நீதசிவாகமத்தை நெடிய அடிமரமாய்
தருமகலக்யானமனு தானேகிளையதுவாய்
யருமலர்க்காய்கனியும் வரம்சொரியாறங்கமதாய்
ஓங்கிவளர்ந்து வுயர்வான்தனைத்தாவி
தாங்கிப்பருவேங்கை தளிர்மரமாம்நின்றனரே

விருத்தம்

வேங்கையின் மரமதாக வேலவ ரிருக்கும் போது
பாங்குடன் வள்ளியம்மை பரண்மிசை யிருந்து தானும்

ஓங்கியே கவணைவீசி யுயர்பச்சி மிருக்மெல்லாம்
யேங்கியே வோடச்செய்தங் கிருந்துகற் றினைகார்த்தாளே

இதுவுமது.

காத்திடும்வேளை தன்னில் களிப்புடன்வேடர்தாமும்
கோர்தியாய்மாபழங்கள் நிமிஷத்தில்கொண்டுவந்து
பார்த்துமேவள்ளியம்மை பசியது தீர்க்கவேதான் [சே
பூர்த்தியாய்க் கொடுத்துத் தானும் புசியென்றுமுறைசெய்தா

இதுவுமது.

பருவமாய்த்தினைமாதேனும் பழங்களுமிகக்கொடுத்து
திரும்பியேவருகும்போது தினைப்புனந்தன்னில்நின்று
அரும்பியபூவுங்காயு மழகுடனிற்குமந்த
தருநிழல்நிகர்த்த வேங்கை தனிமர மொன்றுகண்டார்

அம்மானை.

வேங்கைமரமாக வேலவரும்நின்றிடவே
பாங்கினியவள்ளிதினைப் புகுங்கதிரைக்காத்திருக்க
சந்தோஷமாகவேதான் தகப்பனும்வேடரசன்
விந்தையுடனேனல் விளைந்திருக்கும்கொல்லையிலே
தன்குலம்நீடுழியதாய் தானேதான்வாழ்வுபெற
அன்புடனேவந்திருக்கு மன்னைவள்ளிநாயகியை
கண்டுதாயேவுனக்கு கடும்பசியுமானதுவோ
வண்டுபோல்கூந்தலுள்ள மகளேமனந்திருத்தி
வள்ளிக்கிழங்கும் வருத்ததினைமாவதனை
தெள்ளியதேன்விட்டு திரட்டி மதுரமிகும்
பழவகைகள்பாகுதின் பண்டமெல்லாங்கொண்டுவந்தேன்
இளமனத்தோடேபொசித்து கெம்பீரமாயிருப்பாய்
என்றுநம்பிராஜன் எழில்வள்ளிநாயகியை
நன்றாகதிர்விளைந்த நற்புனத்தைநக்காத்தியென்று
திரும்புகின்றமுன்னிலையில் தேன்ததும்பிபூத்திருக்கும்
பருவேங்கைமாமரத்தை பார்த்தவுடன்வேடரசன்
அதிசயித்துத்தானிருக்க அவனுடனேகூடவந்த
சதிமோசஞ்செய்கொலைஞர் தாஷ்டிகராம்வேடுவர்கள்

பார்த்துப்பிரமித்துயிது பரியந்தமில்லாத
நேற்றில்லாவேங்கைமரம் நீணிலத்திலின்றுவந்த
காரணமின்னதென்று கருதியேவேடுவர்கள்
மாரணமாயேதோவோர் வகையாகத்தோணுதிது
இதனால்சிலதீங்கு மேற்படும்போல்காண்கிறது
பதமானகோடரிவாள் பலவாயுதமெடுத்து
வெய்யோனொளியொழுகா வேங்கைமரந்தனையே
நையவேவெட்டி நறுக்கியெரித்திடுவோம்

வேருடனேமெல்லிச்சில் வேரோடேதான்பிடுங்கி
நேருடனில்லாதபடி நிலத்தில்விழச்சாய்த்து
துரிதமாய்வெட்டி தூரயெரிவோமென்று
எரிபறந்தகண்சிவந்த யிடும்பராம்வேடுவர்கள்
உரைத்தமொழிகேட்டங் குண்மைதனையறிய
நிறையுள்ளவேந்தனவன் நேர்மையுடன்வேடுவரை
வெட்டாமல்தானிருக்க விலக்கியேவேடரசன்
மட்டாரும்பூங்குழலாள் வள்ளியம்மைநாயகிதன்
முகத்தைப்பார்த்தம்மணியே முன்னில்லாவேங்கைமரம்
தகத்தகவென்பூத்திருக்கத் தான்வந்தகாரணமேன்
உண்மையாய்சொற்கட்கா துரையுமெனந்தான்கேட்க
நன்மையாய்வள்ளியம்மை நடுங்கிமிகப்பயந்து
எந்தனுடஅய்யாவே எனக்குமேயிந்தமரம்
வந்தவிபரமெந்த வகையேதும்நானறியேன்
நென்னலேயிலாதமரம் நேர்மையுடனின்றுவந்த
இன்னவிதமென்றெனக்கிங் கேதுந்தெரியாது
திருமேனியும்மனமும் திகைத்துமிகவேநடுங்கி
கருவிழியாவொன்றும் கருத்தில்தெரியாதெனவே
சொல்லும்வசனமதை சுருதியெனவேநினைத்து
கல்மனமதான காண்வேடனனதொரு
பிதாவானவன்பரிவாய் பிரியமுடன்தாயேகேள்
இதமாகச்சொல்லியே யேதுக்குமஞ்சாதேயம்மா
தனிமையாய்புனத்தில் தானிருக்கின்றபடியால்
இனிமையாய்இந்த வினையுள்ள வேங்கைமரம்

துணையாகவேயுனக்கு சுகங்கொடுக்குமந்நிழல்
இணையாகப்பூப்பறித்து எறிந்துகளித்தேயிருந்து
பயமில்லாமல்நீயும் பரிவாகக்கிள்ளைமுதல்
வியப்படைந்துவோட விரட்டிநீகாத்திருப்பாய்
என்வேயுரைத்தங் கேகினர்சிற்றாருக்கு
வனவேடரெல்லாம் மாநகருக்கேகியபின்

விருத்தம்

வனத்தினில் வந்த வேடர் மாநகர் தனக்குச் செல்ல
புனத்தினுக் கருகே தானும் புதுமையாய் வேங்கையான
மனத்தனும் வேலன் ரூபம் மாறி மானிடவனாக
கனத்த வில் மதனைப் போலே கன்னி முன் தோன்றினானே

அம்மானை

கொல்லையருகில்நின்ற குளிர்வேங்கைவேறுருவாய்
வில்லைக்கரம்பிடித்த வேடாசன்புத்திரிமுன்
மன்மதனைநிகர்த்த வடிவுள்ளமானிடனாய்
முன்னெடுத்தவேடம்விட்டு முருகர்வடிவுகொண்டு
கான்வேடரூசன் கன்னிகைமுன்வந்துநின்று
தான்காமவேதனையால் தவிக்கின்றமானிடன்போல்

விருத்தம்.

பலபலநடனங்காட்டிப் பகருவார்முருவல் தோன்ற
திலதநேர்கூந்தல்முன்னே செப்பிளமுலையினளே
துலைதூரமிருந்துவந்து தோகையேஉனைநான்கண்டு
தலமதிலுனதுபாதம் தனைவிடக்கதிவேறில்லை

இதுவுமது.

எக்காலந்தனிலுமுந்தனிணை பிரியாமல்நானும்
கொக்கோகலீலைசெய்து கூடியேயிருப்பேனாகில்
தக்கதோர்தேவலோக தையலருனக்கிங்கேவல்
மிக்கமாய்ப்புரிவார்நானும் வேண்டியதனைச்செய்வேனே

அம்மானை.

பலநடனங்காட்டி பகர்வார்நகைமுகமாய்
திலதநேர்கூந்தல்மின்னாள் திருவள்ளிநாயகிமுன்

கிட்டநெருங்கிவந்து கிருபைபெருக்கமதால்
திட்டமுடன்கந்தருமே செப்புவார்வார்த்தைகளை
கோங்கரும்பையொப்ப குவிந்துமேபொற்குடத்தை
பாங்காகவிம்மிப் பருத்துத்தேமற்படர்ந்த
தனங்களைத்தான்படைத்த தையல்குறப்பாவாய்
மனதுகளித்தெந்தன் வார்த்தைதனைநீகேளாய்
மங்கைக்கரசியேவுன் வடிவின்மிகுதியையும்
சங்கீதவல்லாச சரசகுணங்கேள்வியுற்று
வெகுதூரத்திலிருந்து மிகவும்மனம்வருந்தி
சுகமாயுனைநாடி தோகையரேஇங்குவந்தேன்
தேவியரேபொய்கைவிரி செந்தாளம்பூநிகர்த்து
மேவுமுந்தன்பாதமன்றி வேறேகதிகளில்லை
எக்காலமுந்தன் யிணைபிரியாதபடி
கொக்கோகநூலில் குலாவிமிகவிருக்க
விரும்பினேன்நானும் வேல்போல்விழியாளே
கரும்பின்ரசமொத்தமொழி கன்னிகட்குநாயகமே
தீனனாகியநானும் திரும்பிவிட்டுப்போகவுந்தான
தானேமனம்வருமோ தையலர்க்குநாயகமே
அப்படியேசெய்ய வேணுனன்புமிகவைத்தாலும்
ஒப்பிமனமும் ஒருமித்துநின்றிடுமோ
உடலைப்பிரிந்து வுயிர்தாபரித்திருக்க
திடமாயிக்காரணத்தின் செய்கைதனைவிரித்து
விரித்துத்தான்பேச வேண்டுமேமின்னலைப்போல்
உரியஇடையாளே வோதிடுவாய்பேதாநீ
வேல்போலேகாட்டும்விழி மெல்லியரேயுனது
மால்தனிலேயழுந்தி வாடுகிறேனடியேன்
கிருபையைக்காட்டாமல் கிளர்ச்சியுண்டாகாமல்
சுருவாமல்வேறுவிதம் தான்பிழைக்கமார்க்கமில்லை
அபாயம்வரும்போதில் ஆதரிப்பார்தான்போலே
உபாயமாயென்னை யுனதுநிருக்கரந்தால்
அணைந்துசலாடும் அடியேனுயிர்தனைபே
துணையாகக்காப்பாய் துரைவேடன்புத்திரியே

விருத்தம்.

வார்திமிர்கொங்கைமின்னே வஞ்சியேபநீ நீராடும்
பார்தனில்சுனையாயானும் பரிவுடன்பிறந்தேனில்லை
கார்நிறக்குழலிற்சூடும் கடிமலர்மாலையானல்
தார்புறள்மார்பின்வாசம் அதனையறிந்திடுவேன்பெண்ணே

அம்மானை.

நீர்நீராடுஞ்சுனையாய் நீணிலத்தில்யானுதித்தால்
வார்திமிர்ந்தகொங்கை வாசனையெல்லாமறிவேன்
கார்மேகம்போற்கூந்தல் கருங்கொண்டைமீதினிலும்
மார்பில்புறளும்பூ மாலைநானாகாமல்
விரகவழல்மேலிட்டு மேனிமனத்தையுந்தான்
பறவைபெரித்துபாவையே நான்வாடுகிறேன்
தனதுகிருபைக்கு தான்பாத்திரமாவதற்கு
எனதுமனத்திநுக்கி யாதொன்றுந்தோற்றவில்லை
உனதுதிருமுகமும் வுள்ளன்புங்கண்டாக்கால்
எனதிஷ்டப்படிக்கு யினிநடத்தக்காத்திருக்கேன்
பெண்ணா நசேயிந்த பெருவனத்திலேதனியாய்
திண்ணைமுளளசிங்கம் சிறுபுலிசெந்நாய்க்கரடி
கொடியஜெந்து வாழுங்கோங்கடர்ந்தமாபுனத்தில்
படியிதிற்சிற்றேனல்தனை பாதுநீகாப்பதுவும்
உன்னைப்போலேபெண்கட் கொருபோதுமாகாது
மின்னேயிந்தத்தொழில்தான் மிகவீனமாயிருக்கும்
கண்ணேயென்னுவி காமப்பெருங்கடலே
பெண்ணேகிருபையுற்று பின்பற்றிவந்தாக்கால்
கஜேந்திரசம்பத்துடனே காணிபதாய்பொன்னுலகில்
விசேஷமாய்வாழ்ந்திருக்கும் வேல்போல்விழியுடைய
தேவமங்கையருனது சீரடியைத்தான்வனங்கி
ஏவல்புரிந்தேபோற்றி யியல்புடனேநீயுமந்த
தேவபோகமுற்றிலுந்தான் சேரவனுபவித்து
மூவர்புகழ்கீர்த்தியுடன் முசியாமலென்னாளும்
வையகத்திலேசுகித்திருக்க வைப்பேனிதுவுமன்றி
தையலரேநிருஞ்சுக சம்பத்துடனிருப்பாய்

தேவரீருன்மனதில் தேடும்விருப்பமதை
பாவனையாய்வரக்கால் பகருவீராமாகில்
எத்தகையானாலவற்றை இந்தநிமிஷமதில்
வித்தையைப்போல் கொண்டுவராமிருந்ததொருவல்லவனும்
இவ்விதமாய்ப்பற்பலவாறினிய சொற்களைப்பேசி
ஒவ்வியிருந்தெனக்கிங் குதவிபுரியுமென
காமவிகாரமதால் காட்டும்வருத்தமெல்லாம்
தாமதமில்லாமலேதான் தன்கரங்களைநீட்டி
முகமலர்ந்துபற்களைத்தான் முத்துப்போலேகாட்டி
தகமையுடன்கெஞ்சிக்கந்த சாமியங்குநின்றனரே

விருத்தம்

நின்றிடுஞ்சுப்ரமண்யர் நிகழ்த்திடும்வார்த்தைகேட்டு
குன்றவர்கோமான்சேயும் குறிப்புடனிவரின்ரூபம்
நன்றெனக்கெஞ்சிப்பேசி நாட்டமுமறிந்துநாணி
மன்றல்சேர் குழலாள்மாறு வசன்ம துரைக்கின்றாளே

அம்மானை.

நின்றசுப்ரமண்யர் நிகழ்த்தியதோர்வார்த்தையெல்லாம்
குன்றவர்கோமான்மகளாம் கோதைமிகக்கேட்டு
குறிப்பாய்க்குமரரங்கே கூறுமனக்கருத்தை
அறிந்துகொண்டாளவரின் அதிகவடிவுங்குணமும்
கொஞ்சிப்பேசும்வார்த்தை குளிர்ச்சிவெகுநேர்த்தியதாய்
கெஞ்சியிருக்கின்றசில கேலியெல்லாந்தான்பார்த்து
மனதிலெண்ணிநாணமுற்று மைவிழியாள்தலைகவிழ்ந்து
நினைவிலொருவிதமாய் நின்றுமொழிபேசலுற்றாள்
நானேஎளியகுலம் நாட்டில்குறச்சாதி
கானேகுடியிருப்பாய் கந்தமூலம்பொசிப்போம்
ஈனக்குலத்தாளென் றென்னையறியாமல்
மாநகரைத்தாளும் மன்னர்மன்னர்பூபதியே
குறிபார்த்துச்சொல்லுங் குறச்சாதிமங்கையைநீர்
அறியாதணைவதுங்கள் சாதிக்கடுக்குமோதான்
தலாதமொழிதன்னை தைரியமாய்பேசுவது
அகங்காரமேயலது அய்யாநன்மார்க்கமில்லை

தினைப்புனத்தைக்காத்துத் திரியுங்குறச்சாதியெங்கள்
தலையேபுனிதமில்லாச் சாதியிழிகுலத்தில்
உலகபரிபாலனஞ்செய் யும்மையொத்தராசாக்கள்
பலவாயுளம்மயங்கி பரிதவித்துத்தட்டழிந்து
பித்தனைப்போல்திரிந்து பிதற்றியேகாமமதால்
மெத்தமதிமயங்கி மிகவழக்குச்செய்கிறது
நீதியென்பதெள்ளளவு நிறையணுவுந்தானுமில்லை
மேதினியில்வேங்கை வெறுமபுல்லைத்தின்றிடுமோ
என்றுவள்ளிநாயகியும் இனியமனுநீதியெல்லாம்
நன்றுவழிமார்க்கமெல்லாம் நாடிமிகவேயுரைத்து
வேறுவிதநீதி விரித்துவிரித்தேகாட்டி
மாறுதலைபேசிமறு வார்த்தைசொல்லுங்காலமதில்

விருத்தம்.

மங்கைவள்ளி நாயகி மனங்கள் தடுமாற
சங்கையுடன் வேடுவர்கள் தான்பறை யடித்து
கங்கைவளஞ் சூழ்நகர் கடந்து வழிகூடி
தங்கைவாழ் புனத்தருகு தாவியவர் வந்தார்

அம்மானை.

தாயானவள்ளிமனந் தானேதிடுக்கிடவே
ஓயாமல்வேடுவர்க ளூதுபலகொம்பூதி
குறிஞ்சிப்பறைகொட்டி கூருடனேபம்பைகளும்
விரிவுடனேமுழக்கி வேடுவர்கள்தான்சூழ
கட்டாரிகத்தியுடன் கையில்வில்லம்பெடுத்து
திட்டமுடனரசன் சிற்றார்ப்பதியைவிட்டு
வருகிறஆடாம்பரத்தை வள்ளியம்மைதானறிந்து
உருகிநடுக்கமுற்று வுடம்பெல்லாம்வேர்வைகண்டு
மனதுநிலைகலங்கி மலர்க்கரங்களைப்பிசைந்து
எனதய்யன்மாவதனம் ஏறிட்டுத்தான்பார்த்து
ஐயாகொலைத்தொழிலை யடத்துடனேதான்நடத்தும்
தீயெனவேகொடிய செய்கைகளையுடைய
வேடுவர்கள்முன்பின் மிகயோசிக்காமலேதான்
கேடுகளைவிளைக்கும் கெம்பீரமானவர்கள்

தயவுதாக்ஷண்யம் தானுங்கிடையாது
பயமாகவேசொல்லி பதறித்தலத்தைவிட்டு
பரிவேகம்போலே பதின்மடங்குசாஸ்தியதாய்
துரிதமாய்ச்சென்று தூரத்தில்போமிப்போது
தருணமதுபேதகயாய் தாளிருக்குதென்றுசொல்லி
கருணையுடன்பரிவாய் கன்னியன்பாய்ப்பேசியதும்
தெரிந்துமுருகனுமே சிந்தையுள்ளேதான்மகிழ்ந்து
அறிந்தேனேபெண்ணரசே யஞ்சவேவேண்டாம்நீ
உமதெண்ணத்தின்படியே யுறுதியாய்ச்செய்வோமென்று
தமதுருவம்மாறத் தானேமனதிலெண்ணி

விருத்தம்.

குன்றவர் நெருங்கிச்செல்ல கோதையும் பயமாய்ச்சொல்ல
மன்றலங் கடப்பந்தாரான் மாதவர் வடிவங்கொண்டு
சென்றமேல் வயதுபோல திரேகமுஞ் சுருங்கிக் கூனி
நன்றுயர் சங்குபோல நரைத்தசன் யாசியானார்

அம்மானை.

தேசங்களெல்லாந் தினமுமிகவணங்க
வாசமிகுஞ்சைவ மதத்தையனுசரித்து
வெண்சங்குபோல்நரைத்து மேனியெல்லாஞ்சுருங்கி
பண்புடனேகம்பூன்றி பாதகுறடணிந்து
காவித்துயிலுடுத்திக் கழுத்தில்மணியணிந்து
தாவிப்புலியதனும் தண்டுமொருகைபிடிக்கி
விருத்தசன்யாசியென வேடமிகத்தரித்து
சிரித்துப்புரமெரித்தோன் சேயங்குநிற்பளவில்
கெக்கலிகொட்டி மிருகம் கிட்டவணுகாதபடி
பக்கமெல்லாந்துரத்தி பாதைவரும்வேடர்
எதிரில்போய்வேடராச னிடத்திலேசென்றணுகி
கதிகொடுக்கும்பூரண கடாக்ஷமிகப்பாலித்து
திருநீற்றுப்பையெடுத்துத் திருவிரலால்பூதியள்ளி
குருவேசிவாவெனவே கொடுத்தாரக்ஷிக்கவென்று
வேடர்பெருமானேசென்ற விடங்களிலேவெற்றிபெற்று
தேடியசெல்வமுற்று செயசாலியாயிருப்பாய்

பதத்தையனுபவித்து பாரில்நீடூழிவரை
இதமாகவாழ்ந்தே யிருக்கக்கடவாயெனவே
சொல்லியாசீர்வதிக்கத் தோன்றலந்தவேடுவனும்
நல்லியல்பாய்பூசிதனை நமசிவயவென்றணிந்து
கந்தமூர்த்தியின்பாத கமலங்களில்வீழ்ந்து
சந்தோஷமாய்த்தீர்க்க தண்டமிகப்புரிந்து
ஐயனேசுவாமி அடியார்க்கருள்புரியும்
துய்யனேயென்குருவே தொண்ணூற்றின்மேல்வயதாய்
காடுசெடிசூழ்ந்தவிந்த கனத்தபருவதத்தில்
சூடுள்ளமேடுகளும் சுனைகளுள்ளவித்தலத்தில்
இப்போயான்செய்தவமோ எனதுமுன்னோர்கள்செய்த
தப்பில்லாமாதவமோ தானோவெனவறியேன்
ஆனதால்தேவரீர்க் கானவிருப்பமெல்லாம்
நானதைத்தான்தருவே னுதாவெனப்போற்ற

விருத்தம்.

சரவண பவனும்வேடர் தலைவன்மேற் கிருபைகூர்ந்து
திறமுள்ள வயதுசென்று திரேகமும் நரைத்துக்கூனி
உறமிலா திருக்கும்போதிங் கொன்றுமே தேவையில்லை
குறவரே மலையிலுள்ள குமரியு மாடச்செய்வீர்.
குமரியில் படிந்துநேரும் குணமன வரட்சிநீங்கி
விமரிசை யுடனேநாளு மிக்கமாய் களித்துவாழ்வேன்
சமரச மாகப்பேருந் தான்பெற்று வெகுதூரத்தில்
கமரவே நடந்துவந்த களைப்புத்தான் தீரும்பாரே.

அம்மானை.

சரவணபவனுமப்போ தானேபரிவுடனே
திரமுடையவேடர்யகிழ் சிகாமணியேமாவரசே
சொல்லுகிறேன்கேளெனக்கு தொண்ணூற்றுமேல்வயதாய்
செல்லும்நரைதிரையாய் தேகமெல்லாந்தான்தளர்ந்து
வந்திருந்தவோரிடத்தை மற்றவர்க்கியாதிருக்கும்
இந்தவயதுதனிலெனக்கென்ன தான்தருவாய்
நமக்கொன்றுந்தேவையில்லை நான்வந்தகாரணத்தை
உமக்குத்தான்சொல்லுகிறே னுண்மையாய்க்கேளெனவே

இந்தவள்ளிவரையில் இருக்குமுங்களெல்லோர்க்கும்
சொந்தக்குமரிநதி துலங்கயிக்காலமதில்
நேர்ந்தவரட்சி நிங்கும்படியாக
பார்தனிலிக்காலமதில் படிந்தின்பந்தான் களித்து
சவுக்கியமாயத்தானிருக்கத் தானேமிகவிருப்பி
தவித்துவெகுதூரமதில் தான்வருந்திவேகமதாய்
வந்தேனப்பேறதுதான் வாய்க்கும்படியெனக்கு
சிந்தைமகிழ்வாகவிப்போ செய்வீருபகாரம்
உன்னைபொத்த பேர்களுக்கு வுபகாரம்வேறுபொருள்
தன்னைத்தரவேண்டுமென்று தவமுதியராகவந்த
முருகன்சிலேடையதாய் மொழிந்ததைவேடரசன்
உருதியாய்வுண்மையென வுளமகிழ்ந்துகேட்டவுடன்

விருத்தம்.

நல்லது தேவதேவே நன்மனப்படியே தானும்
வல்லவர குமரியாடி மகிழ்ச்சியா யிருப்பீரெங்தன்
செல்விதான்றனியாயங்கு தினைப்புனத்திருக்கின்றாள் தான்
அல்லலில் லாமலங்கே அவளுக்குத் துணையாவீரே.

வேறு சந்த விருத்தம்.

குறவர் கோனிவை கூறலுங் கேட்டிளம்
திறமை யாகச் சிறப்புடன் வேலனும்
மறமின் மங்கை வசப்படு வாளென
உறமதாக வகத்திடை யுன்னி னார்

அம்மானை.

நல்லதவமுனியே நம்புமனத்தின்படியே
சல்லாபமாய்க்குமரி தானாடியேமூழ்கி
உமதிஷ்டத்தின்படியே வுறுதியுடனேமுடித்து
எமதுபெண்ணங்கே யிருக்கிறாள் தான் தனியே
பெரியவரேயவட்கு பெருமையுடனே துணையாய்
சரியாயடிக்கடிதான் தானங்கருள்புரிந்து
போகவரவேண்டுமென்று போற்றுதற்கேயிறங்கி
யேகமனமாயிதுவு மெழிலாயிருக்கிறது
அவ்வாறுசெய்ய வன்புடனுன்காத்திருக்கேன்
இவ்வாறுசம்மதித் திருக்கின்றவேளையிலே

வேடுவர்கோனுமிகவே சந்தோஷமதாய்
நாமிருகம்பறவை நற்கதிரைக்கொய்யாமல்
கொல்லையிலேகாத்திருக்கும் குமாரத்திதன்னருகே
எல்லையில்லானந்தமதாய் யிந்தபெரியோருடனே
புள்ளினங்கள்கூவும் புனத்திலிருக்குமந்த
வள்ளியிடத்தினிலே வந்திவர்கள்தாஞ்சேர்ந்தார்
சேர்ந்துதினைமாவும் தேன்கனிகள்தான்கொடுத்து
தேர்ந்துபசியாறிச் சிறப்பாயிருமெனவே
செப்பியேவேடரசன் சேயிழையைத்தான்பார்த்து
தப்பிதமில்லாதகுரு சாமியைப்போலிங்குவந்த
தாயேயிந்தப்பெரியோர் தான்குமரியாடவந்தார்
நீயேயவர்க்குதவி நெடுநாளாய்த்தான்புரிவாய்
சகாயமுடனுந்தனுக்கு தானிருப்பாரெப்போதும்
மகாதவஞ்செய்யோகி மனம்போலேதானடந்து
வாருமம்மாவென்று மறவர்பெருமானும்
பாருலகோர்தான்புகழ பதமதிலேயணிந்த
வீரகண்டாமணியு மிகவேகலகலென
மாரனைப்போல்வேடருடன் மனைக்குவந்தானம்மானை.

விருத்தம்.

வேடர்கோன் மனையிற்செல்ல வேதமே நானுங்காணத்
தேடரும்பாதன்றானுஞ் சேயிழை வள்ளிதன்னை
கூடவே மனதிலெண்ணி கொடும்பசிப் பிணியால்நொந்த
ஆடவன் போலேதானு மவளிடமுரைக்க லுற்றார்

அம்மானை.

அவர்கள்மறைந்தவுடன் அருள்சேர்முதியவரும்
நவமணிகள்பூண்டவள்ளி நாயகியைத்தான்பார்த்து
பெண்கள்சிகாமணியே பேதையேநானென்னசெய்வேன்
கண்கள்சொருகி கனத்தபசியாகிறது
நிற்கமுடியவில்லை நினைவுதடுமாறுது
வற்கவனசையன்ன வயிற்றுக்கிங்கேதேனும்
சிறிதுபொசியாவிடில் சீவனுக்குமோசம்வரும்
பரிதாபமாய்வருது பாவையமேயென்றுரைக்க

கேட்டுவள்ளிநாயகியும் கிளர்மனத்தோமெனள்
வாட்டுமெரிபோல்பசியால் வருந்துமவரைப்பார்த்து
பயப்படவேண்டாம் பதறாதீர்மாதவரே
வியப்பாயிருங்களய்யா வேண்டும்படியளிப்பேன்
வள்ளியம்மைதானுரைத்து மனதுமிகவிறங்கி
தெள்ளியதேன்மாவும் தேக்கிலையிலேகொடுக்க
கொடுக்கக்கரம்நீட்டி கொடுங்கவட சன்யாசி
தடுக்காமலாவலுடன் தன்கரத்தாலேவாங்கி
விரைவுடனேவாங்கி வெய்யபசியமத்தி
தரையில்வெகுதூரந் தானடந்தவெட்கையினால்
வயிற்றுப்பசியாலருந்த மார்புலர்ந்துநாவறண்டு
வியர்த்துகளைத்துக் மேல்மூச்சுத்தானாகி
தண்ணீர்தவித்தெனக்கு தாகமெடுக்கிறது
கண்ணீர்ததும்பக் கருவிழிகள்தான்சுழல
என்னசெய்வேன்பெண்ணரசே யென்றுபலவிதமாய்
சொன்னதைத்தான்கேட்டு தோகைவள்ளிநாயகியும்
தவத்திலுயர்ந்தவரே தாமதஞ்செய்யாமல்
விவத்தைவிலக்க வேணசுனைநீர்களுண்டும்
ஏழுகுன்றுகடந்தங்கே ஏகினீராமாகில்
நீருமிகப்பெருக்காய் நெடியதொருநற்சுனையில்
வாரிநன்னீரருந்தி வருவீர்பெரியவரே
கோரியதாகமது குணமாகத்தான்தீரும்
என்றுவள்ளிநாயகியும் இயம்பவேதான்கேட்டு
நன்றுவனவேட ராசன்பெற்றகன்னிகையே
தாகத்தினால்சோகமுற்று தானிருப்பதல்லாமல்
வேகந்தளர்ந்து வெண்பஞ்சுபோல்நரைத்து
கிழவனானிந்த கிரிகளுக்குமுன்னம்வந்து
பழகினவனல்லவென் பாதம்வருந்துமென்று
தாமதஞ்செய்யாமலெந்தன் றனக்குவழியோட்டி
பூமலர்கள்பூக்கும் பொய்கைதனைநீகாட்டி
திரும்பிவிடுமென்று சிவசண்முகங்களையும்
ஒருமுகமதாகவந்தே வுபர்வேடந்தான்தரித்து
பாசாங்குகாட்டிநின்ற பரமன்மகன்சொல்வதையே
வாசமிகுக்கூந்தலுள்ள வள்ளியம்மைநாயகியும்

உண்மையெனநம்பி வுயர்பரணைவிட்டிறங்கி
நன்மையுள்ளசுவாமி நாதாவேவாருமென்று
வழிகாட்டியேயழைத்து மலையனைத்துந்தான்கடந்து
குளிர்ந்தசலம்நிறைந்த கோலசுனையதனை
காட்டியபோது கடுந்தாகங்கொண்டவர்போல்
நீட்டியிருகரத்தால் நீரையள்ளியேகுடித்து
அகத்தில்மகிழ்ச்சியுடனன்பாகதேவிதனை
மிகவேகிருபையதாய் வெகுசிலவார்த்தைசொல்வார்

விருத்தம்

பெண்களுக்கரசே நல்ல பேதையே சொல்லக்கேளாய்
கண்களுமருண்டயெந்தன் காதடைப்பெல்லாம் தீர்ந்தேன்
திண்புயமதனென் பேரில் செருமலர்ப் பாணத்தாலே
பண்புடனெய்கிறனென் பரிபவம் தீர்த்திடாயே

அம்மானை

பெண்கள்சிகாமணியே பேதையிளங்குயிலே
கண்கள்மருண்டயெந்தன் காதடைத்துதாகமுற்று
நெஞ்சடைத்துத்தொண்டை கட்டிநெடுமூச்சுதானெ...
சஞ்சலந்தான்தீர்க்கநல்ல தண்ணீர்மிகக்கொடுத்தாய்
தாகமதைத்தீர்த்துமனத் தளர்ச்சியும்நீங்கவில்லை
மேகமதைத்தாணிகர்த்த மிகக்கரியகூந்தலுள்ள
அன்னமேயென்னுயிரொத்த வருமைத்தவக்கொழுந்தே
மன்மதன்செய்மோக வலையைமிகத்தள்ளித்து
ஆதரிப்பாய்பெண்ணே அடிமைக்குச்சம்பவிக்கும்
ஓதரியவென்குறைவு உள்ளதுமுற்றிலுமே
பெற்றதாகக்களிப்போம் பேதையேயென்றுசொல்லி
குற்றமற்றசன்யாசி கூறிமிகவருந்தி
மதிமயங்கியிருகரத்தால் மாதேயெனக்கூப்பி
கதிபென்றெதிரில்நின்ற காங்கயன்முன்னப்போது
வாசமிருந்தநறுமாலைக் குழலணிந்த
தேசைமிகப்படைத்த திருவள்ளிநாயகியும்
நகைத்துப்பெருமூச்செரிந்து நடுநடுங்கியேசீறி
நினைத்துமனம்பதறிச் செப்பினாளோர்வசனம்

விருத்தம்

நற்கதி சேர்க்கவல்ல நாயகன்றனைப் போல்வந்த
வர்க்கத்தின்முதியோரேயுன் மதியதுமருண்டு காணும்
தர்க்கமுங் குணத்தைப் பார்த்தால் தவசியைப் போலேகாணேம்
வெட்கமா யிருக்குதென்று மிகவும் பின்னுரை செய்வாளே.

அம்மானை

நற்கதியிற்சேர்க்கவல்ல நற்றவசுதான்பூண்ட
வர்க்கமுதியவரே மதிமருண்டுபேசுகிறீர்
ஐயரேயுமது அதிசயங்கள் தான்பார்க்கில்
பையமதுரமிகும் பால்போல்மொழிகாட்டி
சாப்பிட்டகாலமுயிர் தான்வாங்கநஞ்சதனை
யேப்பிட்டுவைத்தவியல் பாகத்தோணுறது
பக்ஷிமிருகம் பலசெந்துதான்தினையை
இக்ஷிக்கவொட்டா திருந்துமேகாத்தவென்னை
குற்றமற்றசன்யாசங் கூடுமுனிபோலேவந்து
உற்றுவிகாரமதா யுரைத்துப்பலபலவாய்
வஞ்சித்துத்தூரம் வரச்சொல்லியேமாற்றி
கெஞ்சிமதலீலைசெய்ய கேட்டுவிருப்பமுற்று
நினைத்ததுவுமதேதென்னை நின்றுபலவாறுகெஞ்சி
எனைத்தான்கரங்கூப்பி எதிரில்வந்தேமறித்து
உம்மையொத்தமாதவர்கட் குறுங்கியிதுநீதியிதோ
தம்மையில்லாச்செய்கைகளை தான்சிறிதைக்கண்டாக்கால்
எம்பினத்துவேடர்களுக் கிதுதெரிந்துதாமாயின்
நம்மிருவர்க்குந்தீங்கு நாடிவருமையமில்லை

விருத்தம்.

சங்குபோல் நரைத்துநீருந் தவவேடம் பூண்டதல்லால்
பங்கமேயலாது வேறுபவிதமாங் குணத்தைக் காணேம்
மங்கையர் மீதிலாசை வைப்பது நீதியாமோ
இங்கு யென்னிடத்திலாசை யியல்புடன் வைத்திடாதே

அம்மானை.

இழிகுலத்திலேபிறந்த வென்மேலேயிச்சைகொண்டீர்
பழியிதுதானுறும் பயித்தியங்கொண்டவர்போல்

வாயிலேவந்தபல வார்த்தையெல்லாஞ்சொல்லுகிறீர்
தாய்தந்தைவேடர்குலத் தவர்க்கெல்லாமேபழியே
நாட்டவேரிந்த நல்வேடந்தான்புரிந்தீர்
காட்டகமாம்புனத்தில் காவல்செய்துகொண்டிருந்து
புனத்திற்கதிரதனை போற்றுவாராருமில்லை
வனத்தில்வாழ்பக்ஷிகளு மானுமிருகமெல்லாம்
முதிர்கதிரைக்கொய்து முறித்துப்பயிரையெல்லாம்
எதிர்பாராமலசிதைத்தங் கெறிந்துசின்னபின்னமதாய்
தாவியழித்துவிடுந் தகப்பனார்வந்தாக்கால்
கோபித்துக்கொள்வார் கொடுங்கேடுசெய்திடுவார்
பேச்சுப்படித்தவரே பெரியகிழத்தவரே
யேச்சுக்கிடமில்லைம லேகிவிடுமப்பாலே
வழியைவிடுமினிமேல் வந்தனந்தபெற்றுவிடு
யெளியவளைத்தடுக்கா தேகிவிடுமிப்போது
விரைவினிலேசென்று விளைந்ததினைக்கதிரை
தரைதனிலேகாக்கத் தான்போரேனென்றுசொல்லி
புலிதான்பசுத்தோலை போர்த்துபசுக்கூட்டமதில்
நலியாமற்போய்ப்பாய்ந்த நாட்டம்போல்காணுதிப்போ
சன்யாசிவேடமதை தானேமிகத்தரித்து
அன்யாயமாய்க்காம வாவல்மிககொண்டீரே
பாம்புக்குப்பால்வார்க்கப் படுவிஷத்தையேகொடுக்கும்
வேம்புக்குத்தேன்வார்க்க மிகக்கசப்பதாயிருக்கும்
பிச்சைக்குவந்தவன்தான் பெண்டுக்குநாயகனாய்
இச்சைகொள்வானென்றே இயம்பும்பழமொழிபோல்
என்றுமேதான்பலவாய் யேற்பாடுதான்பேசி
குன்றுவனஞ்சூழ்ந்த கொடுங்கானின்பாதைவழி
தூரிக்கொண்டேநடந்தாள் துரைவேடன்புத்திரியும்
பாரில்சுருதியையொத்த பாவைமனத்தினையும்
உருதியையுங்கண்டுமெச்சி வுளமுந்திகைத்தவராய்
கருதியென்னசெய்வோமென்றுகருத்தில்மிகயோசனையாய்

விருத்தம்.

ஒருவித நினைவுகொண்டங் குயரண்ணன்தனை நினைந்து
பருவமாய் மூலமந்திரம் பரிவுடன் தியானஞ்செய்து

கருவிழிவள்ளி முன்பு கரியெனவே வந்திம்மாது
மருவியேயென்னைச் சேரவைத்திடுங் கணேச நாதா

அம்மானை.

ஓர்நினைவுகொண்டே யொப்புவமையில்லாத
நேர்முன்னவனாக நீணிலத்தில்வந்துதித்த
விநாயகனையுந்துதித்து மீறிப்போம்கன்னிமுன்னே
யினாவாகவாருமென்று வேண்டினாப்போது
விரிவாகப்போறிடவே வேடுவர்கோன்தன்மகள்முன்
பரிவாகத்தம்பிசொன்ன படிக்குமிகப்பருத்த
தேகமதயானையெனச் சீராய்வடிவுகொண்டு
வேகமுடனடந்து விரிகடல்போலேயிறைந்து
திசையெட்டுந்தானதிரத் திறண்டதுதிக்கைநீட்டி
அசைத்துமரம்பிடுங்கி யாணிவேர்தன்னுடனே
வழியையடைத்து வருகுதானந்தமதாய்
விழியாலேபார்த்தாளே வேழமதையப்போது

விருத்தம்.

மதகரிதன்னைக்கண்டு மனமதுநடுங்கிவேர்த்துப்
பதறியேதிரும்பிவந்து பண்டாரச்சுவாமியென்னை
சதமெனக்காவுமுந்தன் சம்மதப்படியேசேர்வேன்
இதமுடன்பின்புசென்றே யிருகையால்ப்பிடித்திட்டாளே

அம்மானை.

மனமருண்டுமெய்நடுங்கி யழைத்தாரைபோல்வேர்த்து
வனத்திலுதவியதாய் மற்றதுணையில்லாமல்
சரசமொனத்திரும்பித் தானேகைகாணுதரி
விரைவாகவோடிவந்து வேடத்தைதக்கொண்டிருக்கும்
குமாரசுவாமியிடம் கொம்பனையாள்போய்ச்சேர்ந்து
விமலனேசுவாமிமத வேழமெனைவிரட்டி
அடுத்துவருகிறதிங் காவலுடனேடிவந்து
தொடுத்துவருகிறது சுவாமியெனைக்கண்பாரும்
மதகரியாலடியாள் மாண்டுநான்போகாமல்
இதமுடனேரக்ஷித் தெனைக்காப்பாய்மாதவனே

விநாயகர் யானையாக வந்தது.














கருணைமிகப்புரிந்து காக்கக்கடனுமக்கு
பருவமுடனெண்ணியதோர் படிக்குநான்சம்மதிப்பேன்
என்றுமேபின்புறத்தி லிருகரத்தாலேசேர்த்து
நன்றாகவேதழுவி நாடிப்பிடித்திருந்தாள்
தேகம்பூரித்துவள்ளி திருமுகமண்டலத்தை
தாகமாய்ச்சற்றேதிருப்பி தான்பார்த்தாரம்மானை.

விருத்தம்.

பெண்களுக்கரசேயெந்தன் பேதையேசொல்லக்கேளாய்
திண்துதிக்கைபடைத்த திடகரிதனைவிரட்டி
கண்களுங்களிக்கச்செய்வேன் கனமுடன்சுகமாய்வாழ்வாய்
தண்மதிமுகத்தையொத்த தையலேயஞ்சவேண்டாம்

அம்மானை.

பெண்கள்சிகாமணியே பேதையேநீயஞ்சாதே
கண்ணில்காணாமல் கரியைவிரட்டிடுவேன்
சஞ்சலமற்றுச்சுகமாய் தானிருப்பாயினிமேல்
அஞ்சவேண்டாமென்றே யாதரித்துப்பற்பலவாய்
சொல்லிக்குமரேசருமே துதிக்கையுடையோனை
வல்லபைபாகாகணேசா மாதந்திமாமுகத்தை
படைத்தபரம்பொருளின் பாதமதைவணங்கி
இடைவிடாமல்வழுத்தி யிப்போதுதேவரீர்தான்
தயவாயெழுந்தருளி தாபவந்தகாரணத்தால்
பயமாகிக்கன்னியரும் பரவசமாயென்னிடத்தில்
சேருவதாய்ச்சொன்னாள் திருந்தவேயென்கவலை
ஆறுவதுதானிதுமே யண்ணாவெனத்துதித்து
ஏமதிறைவனேயுந்த னிருப்பிடம்போய்ச்சேருமென்று
தமதுதிருவாக்கால் தானனுப்பயேகினரே
தப்பியிடத்தில தவைசெய்துதான்மறைய
அப்படனேவல்லகலை யாரியனும்போது

விருத்தம்.

வள்ளியைத்தனிமையாக வளர்பூங்காவனத்தில்சேர்ந்து
புள்ளிமா னயிலின்வேலன் பூரித்துக் காதல்கூர்ந்து
தெள்ளிமையாக ஆறுசிரசினில் மகுடமின்ன
ஆனியபூ [illegible] சுரூபத்துடன் வந்தார்.

அம்மானை.

வள்ளியம்மைதன்னோடு வளர்காவினிற்சேர்ந்து
புள்ளிமயில்வேலருளம் பூரித்தக்கான் களிக்க
கலந்தின்பமுற்றுக் காதல்மிகமேவிருந்து
நலந்திகழ்வள்ளியிடம் நற்றிருவைதானுமுற்று
நிமிஷத்தில்தான்மறைந்து நேமுடிவயிரமுடி
அமிஷத்துடன் துலங்க ஆறுமுகந்தானிலங்க
பன்னிருகுண்டலங்கள் பளபளெனச்செவியில்
பொன்னின்நவரத்னமணி பொருந்தவாகுவல்லயமும்
மார்பிற்புரிநூலுமே வயங்கவேதானணிந்து
பார்புகழவீராறு பருப்புமெய்வீரமதாய்
விசாலமாம்மார்பும் வீரதண்டையுஞ்சிலம்பும்
திசாதிசையோர்போற்றுஞ் சீபாதந்தான் துலங்க
மயில்வாகனத்தில் வந்தேயெழுந்தருளி
குயில்போல்மொழியாள் குறத்திதனக்கெதிராய்
தண்மையுள்ளரூபமதா தன்னையவளறிய
உண்மையுடன்வேல னுகந்துநற்காக்ஷிதந்தார்
இந்தப்படியாய்க்கோல மெடுத்தாரேவேலரென்று
விந்தையுடன்வள்ளி மிகவணங்கியேதொழுதாள்

விருத்தம்.

விழியி லானந்த வெள்ளம் பெருகிட
தெளிவதாகச் சிறந்து மகிழ்ச்சியாய்
அளிகள் சூழ்குழ லம்மைசந் தோசமாய்
மொழிகள் பேசி முருகனைப் போற்றுவாள்.

அம்மானை.

விழிகளிலானந்த வெள்ளமிகப்பெருக
தெளிவுடனேமனது தோந்துமகிழ்ச்சியுடன்
முக்கால்வலம்வந்து மெய்கழலின்மீதினிலே
தக்கபடி பணிந்து தாளெகரங்கூப்பி
மெய்ப்பத்தியாக விசுவாசந்தன்னுடனே
கைகெட்டிவாய்பொத்தி கதிர்வேலர்தன்னுடைய

பெருமைபெருங்குணமும் பேருமதிசயமும்
விருப்பமுடன்வள்ளி விரும்பிமனமங்கலமாய்
கெம்பீரமாய்க்கொண்டாடி கிளர்ச்சிபெறுதற்கரிய
இன்பசுகம்பெற்றுவஅளி யிந்தப்பிரகாரம
தண்ணமுதபாகுமொழி தையல்வள்ளிநாயகியும்
விண்ணப்பஞ்செய்ய மிகவேதொடங்கினளே

விருத்தம்.

சுயவடிவதனை முன்னம் தோன்றவேகாட்டிநீரும்
செயவடிவேலைத்தாங்கி சிறப்புடன் ரக்ஷித்தால்
பயமதுநீங்கியுந்தன் பங்கயத்திருத்தாள் சேர்வேன்
தயவதுசெய்துபோகம் தானனுபவிப்பீர்சுவாமி

அடியவள்செய்தகுற்றம் யாவையும்பொறுத்தேயிந்த
படிமிசையெனையாட் கொண்டுபாதகமெல்லாந்தீர்த்து
கொடியவள் தன்னைக்காத்து கொடுமையையகற்றிவீரல்
வடிவுடனடியாளாகி மலர்ப்பதம்தொண்டுசெய்வேன்

அம்மானை

சுயசோதிபரமயமாய்ச் சூரியப்பிரகாசமென
செயவெற்றிவேல்தாங்கி சீர்மையுடனேயிருக்கும்
தங்களிஷ்டப்படிக்குத் தான்போகபாக்கியமும்
பங்கமில்லாதனுபவித்து பண்பாய்க்களியாமல்
இதுபரியந்தம்பல யினியநடனங்களை
குதுகுலமாய்க்காட்டி குறைவின்காலங்கழித்த
காரணந்தானின்னதென்று கருத்திலேயானறியேன்
பூரணமாய்பேதமைதான் புகன்றார்மாதர்க்கெளவே
பெண்மதியினுற்றமது பெருமைகளைக்கண்டறியேன்
எண்ணமேலேபலவா யியற்கைகுறைவுசெய்தேன்
அவைகளெல்லாந்திருவுளத்தி லதிகம்பாராட்டாமல்
இவையெல்லாம்ரக்ஷித்தே யெனைக்காப்பதுன்பாரம்
இன்றுமுதல்நாயினேனை இணையடிமையாய்ச்சேர்த்து
நன்றேனையாட்கொண்டு ரக்ஷிக்கவேணுமென்று

திருமேனியும்நடுங்கத் திகைத்துப்பலவிதமாய்
குருவெனவேபற்பலவாய் கூறினாள்முன்னிலையில்
குமரதேவர்பரிவாய்க் கூறியவளிடத்தில்
கவனமதாய்மனதில் கடாக்ஷம்வைத்தேதுசொல்வார்
பெண்ணரசியேமுன்னம் பிறப்பினிலேயென்னுடைய
நண்ணுமெந்தன்றாய்மாமன் நாரணனார்தனக்கு
மகளாய்நமைச்சேர்ந்து மணங்களிக்கவிருப்பமுற்று
அகமகிழ்வாய்நீயு மளவற்றகாலமதாய்
கடினமாகியதவங்கள் கருத்துடனேசெய்திருந்தாய்
படிமிசைநாமெழுந்தருளி பண்பாயுரைத்தபடி
இந்தப்பிறப்பினுனக் கினியவரமருள
வந்தேனேமேலுமென்னை வற்புறுத்திப்பேசியதை
எல்லாந்தவுத்திகமாம் எனவேதானெண்ணமுற்றேன்
நல்லமனமகிழ்வாய் நாடியிருக்கக்கடவாய்
என்றுதழுவியியல்பாய் கடாக்ஷம்வைத்து
நன்றுமேவடக்கொடியே நாடியிவ்விடத்தில்வந்து
வெகுநேரமாச்சுதிப்போ விளைந்ததினைப்புனத்தை
சொகுசாகக்காக்க துரிதமுடனீபோவாய்
நாடியுந்தன்பின்புபற்றி நானங்குதானுமுன்னை
தேடிவருவேனென்று திருவாக்காலேயுரைத்தார்.

விருத்தம்.

தேடத்தான் வருவேனென்று திருவாக்காலய்யன்கூற
நாடியே வள்ளியம்மை நாயகி விடைகள்பெற்று
ஓடியே புனத்தில்மேவி யுயர்பரண் மீதிலேறி
பாடியே கவணைவீசிப் பட்சியை வெருட்டினாளே.

அம்மானை.

சேர்ந்துமுன்னந்த செய்யபரண்மீதேறி
ஓர்ந்துகவண்சேர்த்து வோலோலமென்றெறிந்து
பட்சிமிருகமெல்லாம் பறந்துவெருண்டோட
கச்சிளங்கொங்கைமின்னார் கன்னியந்தச்சேடியர்கள்
அடுத்தபுனத்திலிருந் தன்புடனேயிங்குவந்து
தடுத்தவர்கள்வேறுசில சந்தேகமாய்நினைத்து

கலைவிபிடத்திலவந்த தாளிணையைத்தான்தொழுது
சிலபொருவாய்ப்பேசி திருமனமும்மென்னடையும்
நொடிப்பாவனைப்பேச்சும் நடபமுடனேபார்த்து
வடிவாகவேறுபட்ட வார்த்தைசிலகறித்து
பாங்கிதலைவிதலைப் பார்த்துத்தனியாக
ஓங்கிவிளைந்தகதி ருயர்பறவைதின்றழிக்க
விட்டெங்கேசென்றீர் விபரமதைசொல்லுமென்
மட்டில்லாநாணமுற்று மங்கையரேநீகேளாய்
வெப்பஞ்சகியாமல் மேவிச்சுனைநீராடி
சொற்பக்கழுகையிலே தோகையரேயிங்குவந்தேன்
எனமாறுசொல்ல வேந்திழையும்தானகைத்து
மனமாறியிந்தநல்ல வார்த்தைகதிபேசியது
கருப்புநிறவிழிகள் கலங்கிமிசச்சிவந்து
இருப்பதுங்கொவ்வைக்கனிபோ லிலங்குமதாம்வெளுத்து
வட்டமிட்டகொங்கைகள்தான் வரிப்பசலையோடுவிம்மி
திட்டமாய்ச்செங்கைவளை சோரமேலேசோர
களித்துமறுபாடாய்க் கழறியதோர்வாசகத்தை
மொழிந்தவள்ளச்சுனைதான் முக்கியமாயெவ்விடத்தில்
இருக்குதுகாட்டெனவே யியம்பவந்தபாங்கியனை
வெருக்கவேபார்த்தெனது மிக்கமுள்ளதோழியென்று
உன்னைத்துணையென்றுசொல்லி யுண்மையெனதானிருக்க
என்னைச்சிலகுற்றம் யெண்ணியேபார்ப்பளவில
மிகவுங்கடினசித்த மிருப்பவளாய்க்காணுறது
அகமுமிறக்கமுமற் றப்படியேபேசவந்தாய்
எனவேபிணங்கி இந்தவிதமாகவேதான்
தனதானபாங்கியரும் தானும்வாதாடிநிற்க

விருத்தம்.

பாங்கியும் வள்ளிதன்னைப் பார்த்துவா தாடிநிற்க
வேங்கையி னுருவாய்வந்த வேலவர் வேடனாக
தீங்கிலா துருவங்கொண்டு திடத்துடனேடிவந்து
ஓங்கியானெய்தயானைவெருளித்ததைசொல்வாய்பெண்ணே

அம்மானை.

வேங்கைமரமாய்நின்ற வேலவருந்தானறிந்து
பாங்காய்மனதிலெண்ணிப் பார்த்துமேதானுமொரு
திருவிளையாடல்செய்யத் தேசிகனுந்தானினைந்து
பருவமுடன்சல்லடத்தைப் பாங்காகத்தான்பூட்டி
தட்டிவரிந்துகட்டி தன்சிகைகோதிமுடித்து
மட்டில்லாப்பீலிகையும் வகையுடனேதான்சொருகி
பலகறைபூச்சுற்றி பாதத்திற்சோடணிந்து
கலகலெனவிற்பூட்டி கணைகளைத்தானெடுத்து
வங்கியைத்தான்சொருகி வனவேட்டைதானாடி
இங்கிதமாய்வாரவன்போல் யெண்டிசையுந்தான்பார்த்து
அதட்டிப்பதஞ்சிவக்க வதிவேகமாகவந்து
கொதட்டியசொல்லாலே கோதையரேபெண்ணரசே
நானெய்தபாணத்தால் நற்றேகமுற்றிலுமே
தானேகுருதியுடன் தான்பேழைவாய்திறந்து
இடிபோல்வீரிட்டு எய்த்துநடையுடனோர்
பிடியானைதன்னை பெருவனத்தில்காணீரோ
சாடைதெரிந்து தானொளித்துவைத்தீர்களோ
பேடைமயிலன்னய பெண்களேதூரமதில்
விரட்டித்தான்விட்டீர்களோ விபரமதையுரையும்
அரட்டியேபற்பலவா றுறுமுகவேலவரும்
நிற்பதைப்பாங்கிகண்டு நேரிலேதானுமப்போ
பற்பலவாறுகப் பகர்வாளெதிர்மொழிகள்
உப்மையொத்தபுசபலத்தை வுடையவீரற்குமது
தம்மையுஞ்சூர சயப்ரதாபங்களையும்
சொல்லுவீராமாகில் சூரருமைமதிப்பார்
புல்லிதினைப்புனத்தில் புள்ளணுகாமல்காக்கும்
பேதைமங்கையரிடத்தில் பிரபலகெம்பீரமதாய்
வார்த்தைமிகவாடுவது வழமையோவாடவர்க்கு
ஐயாநீர்வேட்டையாடி வருமாண்மைகளை
மெய்யாய்தினப்புனத்தை விழுவாகக்காத்திருக்கும்
தலைவியிருட்டமதை தானேகுறிகுணமும்
பலவாய்மதித்திப்போது பகருவதுண்மையதே

இவ்விருவர்நாட்டமதை யெண்ணிப்பார்க்குமிடத்தில
ஒவ்வியதாய்த்தானிருக்கு முயர்தழைகளைமுரித்து
தேகமுற்றிலும்மூடச் செய்துவஞ்சகுரல்காட்டி
வேகமுடன்பக்ஷிகளை மிகப்பிடிக்கும்வேடனைப்போல்
காணுகிறதிவர்கள் கருத்திலேகொண்டசெய்தி
தோணுமயல்குறிப்பைத் துணைவிழிகள்காட்டுறது
என்றுமனதிலெண்ணி யினியிங்கிருப்பதுவும்
நன்றல்லவென்றவளும் நடந்தாளேவேகமதாய்
வேறுகொல்லைபாங்கிசெல்ல வேடுவனுய்யானைதனை
மாறுபாடாய்எய்தவிதன வனுவீரம்பேசிவந்த
கந்தனும்பின்பற்றி கரியகுழல்பெண்ணணங்கை
முந்தவென்கோரிக்கை முறையுடனேகேட்டருள்வாய்
எனவேதான்சொன்ன ரியல்பாயெனக்குறுதி
தனதானசுற்றம் தனதாஞ்சிநேகிதரும்
நீங்களேஎன்னுடலில் நிற்குமுயிராயிருக்க
தாங்களிருவருக்கும் தான்வேண்டியபொருள்கள்
எத்தனையானுலு மிந்தநிமிஷமதில்
யுத்தப்படிகொடுக்க வுகந்துநான்காத்திருக்கேன்
நீங்கள்சொல்லுமெத்தொழிலும் நிமிஷத்திலசெய்திடுவேன்
தாங்கோபங்கொள்ளாமல் சாற்றுமனுக்கிரஹம்
செய்யவேவேணுமென்று செவ்வேள்மொழிந்திடவே
மெய்யாய்ச்சொல்லுங்குறிப்பை மிகத்தோழிகண்டறிந்து
அய்யனேதிண்ண மாகுமிதுவேசிறந்த
மெய்யனேயிக்குலந்தான் மிகுபூமியுள்ளளவும்
தீராப்பழிப்புரையைச் செய்துவைக்கவந்தீரோ
கூறுயோவிந்தவிழி குலமரபில்வந்துதித்த
கானக்குறத்திதனை கனவான்விரும்புவது
ஈனமதாகுமழகோ யிதுவேதகாதெனவே
மறந்துவிடுமென்றுபல மாறுமொழிதோழிசொல்ல
வரமிகுந்தவேலவரும் வார்த்தையவரேதுசொல்வார்
எனதுதாய்மாமன் ஸ்ரீமகாவிஷ்ணுபெற்ற
கனமாமமுதையொற்ற கன்னிகையேவேடரசன்
பெற்றதவக்கொழுந்தே பெண்களுக்குநாயகத்தை

உற்றெனக்குக்காதல்தந்து வுயரருள்செய்காரிகையே
குறப்பேதையென்றுரைக்கும் கொள்கைமிகப்பேதமென்று
திறமாகவேயினிய செப்புமொழிதான்கேட்டு
பாங்கிதான்பார்த்து பகர்வதுமேதோன்றாமல்
ஏங்கிமயங்கியிந்த யேந்திழையுமேதுசொல்வாள்
ஐயாசிலநேர மானதுபின்னாக
வெய்யவனவேடர் மிகவேதிரட்சியுடன்
வருவார்மிகக்கொடியர் வந்துசந்தேகமுற்றால்
கெருவமாய்முன்பின் கிருபைவைத்துப்பாராமல்
பழிபாதகங்களுக்கு பாரினிலஞ்சாமல்
விழித்துப்பாராமல்கொலைகள் மிகப்புரிவாரய்யமில்லை
ஸீர்தாமுமிவ்விடத்தில் நிற்பதுநியாயமில்லை
நேர்முகமாய்த்தான்பார்த்தால் நீணிலத்திலெங்களுக்கு
உரியவுயிர்போக்கிடுவா வுண்மையுமென்னசெய்வாரோ
தெரியாதுமேலும் திருநம்பியிவ்விடமிருந்தால்
ஆவதுதானொன்றுமில்லை யாதலால்வீண்வாதேன்
போவதுதான்நல்லதென்று புகன்றாளேநீதிகளை
சொல்லித்தலத்தைவிட்டு துரிதமாய்ப்போமெனவே
மெல்லிநல்லாள்பயமுறுத்தி வேணவிதம்சொல்லிடவே

விருத்தம்.

சரவண பவன்நகைத்து தையலே வள்ளிதன்னை
திரமுட னெனக்குச்சேரச் செய்துநீ வையாவிட்டாய்
பரவவே பேட்டிலந்தப் பாவையின் வடிவைக்கண்டு
உரமுடனுங்களூரி லொட்டிநான் மடலூர் வேனே.

அம்மானை.

சரவணபவன்நகைத்துத் தானல்லசாரிபந்தான்
பாவுவிழிப்பெண்மணியுன் பாவைவள்ளிநாயகியை
கூட்டியுபவுசெய்து கொடுக்காமல்போனைக்கால்
ஏட்டிலவள்வடிவை யெழுதிமடலேறி
உங்களூர்வீதிகளி லொட்டத்துணிந்திருக்கேன்
அங்கேயக்காலத்தி லறிவார்சகலருமே
இதனையோசித்து யேற்றபனக்குதவ

ஆதனைத்தடைசெய்வா யாகில்குறித்தபடி
நாளைக்கேநான்முடிப்பேன் நமபுநீசத்தியமாய்
ஏழையெனவெண்ணா யிருந்திடாய்என்றுசொல்லி
பாலசுப்ரமண்ய பகவானும்பேசியதை
காலமிதுதானே கருத்திலேபாக்கியரும்
தீராவசைமேலும் செய்துமேவையாமல்
ஆறாதகோபமதை யகற்றுமனதிறங்கி
காவுமெனச்சுவாமி கருணைமிகப்புரிந்து
யாருமோதாதெரியும் பருத்தவனப்பூங்காவில்
மாதாவிக்கொல்லையிலே மறைந்திருப்பீராமாகில்
நாதாவேயுந்தனுட நற்காதல்மங்கையரை
அத்தலத்துக்கேகு வழைத்துவருவேனனவே
உத்தரிதாமெனவே வுடன்படிக்கையாயுரைத்து
அனுப்பிவிட்டுத்தூதியரும் அடுத்தபுனல்காவல்செய்யும்
தனுப்புருவமின்னாள் தன்தலைவியிடந்தனக்கு
ஏகின்றமுன்னிலையில் யெமதிறைவனமகிழ்ச்சியுடன்
வாகுடனேநடந்து மாமேகஞ்சஞ்சரிக்கும்
உன்னதமாதாவி வுயர்கொல்லைதான்சேர்ந்து
நன்னயமாய்வேலவரும் நாடிமகிழ்ந்தேகயவர்கள்
வரவுக்கெதிர்பார்த்திருந்தார் வனக்கிளிபோல்பாக்கியநம
குறவர்கோன்றன்மகள்முன் கொம்பனையாள்போய்ச்சேர்ந்து
தலைவிதிருவடியில் தான்பணிந்தேகுலந்து
குலவேலைத்தாங்கியதோர் குமரனைப்போலிநப்போன்
காதல்மிகுதிதனைக் கண்டிசையாமற்போனால்
ஆதலினால்வருகு மயதூறுமத்தனையும்
விபரித்துச்சொல்லி மிகத்தேற்றியொற்றுமையாய்
தவறியிடாதவளாய் தலைவிதினைப்புனத்தை
கடக்கமெல்லக்கொண்டுபோய் காவில்மயிலினங்கள்
திடமாய்க்களித்தாடி தினந்திரியுங்குளிர்ந்த
மாதாவிப்பொங்கரிலே வந்துமிகநுழைந்து
சீதாவியேகளித்து நின்றுமிகவேமகிழ்ந்து
மாதாவேயிவ்வனத்தில் வாசமிகும்பூப்பரித்து

தோதாகமாலைதனைத் தொடுத்துமிகக்கொண்டுவந்து
உமதுகொண்டைமீதணிய வுகந்துநான்கொண்டுவாறேன்
சமதாய்வரும்வரையில் நன்பையுடனிவ்விட்டத்தில்
வேடிக்கைபார்த்து மிகவேயிருமெனவே
நாடிக்குறிப்புரைத்து நடந்துபாங்கிசென்றபின்பு
வள்ளிநாயகிதானு மனமுருகிவேல்விழியால்
புள்ளிமயிலேறுகின்ற புனிதன்வரவைப்பார்த்து
அங்கிருக்குங்காலமதில் அளவிறந்தமகிழ்ச்சியது
பொங்கிக்குருபரன்முன் போலேவடிவுகொண்டு
யெதிரில்நின்றபோதிலெழில்வள்ளிநாயகியும்
புதிவாய்க்கமலநிகர் பாதங்களில்தான்பணிந்தாள்
திருமாலின்றன்மருகன் திருக்கரங்களைநீட்டி
முருவலுடனேதான் முத்தமிட்டேயணைத்து
மரத்தடியிற்சேர்ந்து மருவிக்கலமுகந்து
தரப்படிவிலையிலே தானேகளித்திருந்த
காலையிலேதேவிதனைக் களிப்புடனேதான்பார்த்து
பாலையமுதனைய பசுங்கிளியேயாரடிதே
வேடருடனுன்தகப்பன் வேண்டிவரும்போதிலுனை
தேடவருமாதலினால் சேடியுடனேவிரைவாய்
புனக்காவல்கொண்டிருக்க போகக்கடவாய்நானை
மனக்காவலாகவந்து வருவேனெனமறைந்தார்
அக்காலம்வள்ளியம்மை அப்பனமுகங்காணமல்
மிக்கமுடன்வருந்தி மிகுமாதவிகடந்து
வரும்போதுபாங்கியுமே வந்தேயெதிராகவேதான்
இருவருந்தான்கலந்தங் கின்பாய்ப்பறித்துவந்த
வாசமிகும்புஷ்ப மாலைதனைத்தான்கொடுத்து
நேசமுடன்கரிய நெடுங்கூந்தலிற்சூட்டி
தலைவியம்வள்ளியம்மை தன்னுடனேபாங்கியவள்
குலவிமிகப்பேசியேகை கோர்த்துமேபோம்போது
தனதானபாங்கியுடன் தானுமகிழ்ச்சியதாய்
மனதாரத்தானடந்து வளர்புனத்தில்போய்ச்சேர்ந்து
காந்தனிலேகட்டியதோர் கவணதிலேவுண்டையைவைத்து
பறந்துவருங்கிளிமுதல் பக்ஷியெல்லாந்தான்வெருட்டி

கணவனைத்தான்பிரிந்த காரணத்தினாலேதான்
சணமதிலேவாட்டமுற்று தன்றொழிலைசெய்திருந்தாள்

விருத்தம்.

முதிர்தினை வளர்ந்துமணி முற்றிலும் நிறைந்து
கதிர்களு முதிர்ந்திடக் காவலவ னுடனே
சதிர்பெருகு வேடுவர்கள் தானதை யருக்க
பதியதுகடந்து மகள் பாணருகு வந்தார்

அம்மானை.

கதிர்களெல்லாந்தான்விளைந்து காய்த்திருக்குமத்தருணம்
சதிராகவேடராசன் தானுமுதலானவரும்
தெரிந்துகுறிச்சிவிட்டு திரண்டுவரும்படிக்கு
அறிவித்துவந்துவள்ளி யம்மைதனைப்பார்த்து
தினையின்கதிருத்து திருந்தவேதானடித்து
மனைக்குமேபோக வருங்காலமாச்சுதினி
வேங்கையேபூத்து மிகவேமலர்ந்ததினால்
தீங்கைமிகவிளைக்கும் செய்யசுனையிற்படிந்து
பனிவெயிலினாலேயுநம் பண்பாய்க்குளிர்சுரமும்
இனியேல்த்தானுண்டாகு மிங்கிருக்கக்கூடாது
காவனஞ்சூழும்புனத்தை காத்துவருத்தமுற்றால்
மாவளஞ்சேரூர்க்கு மகிழ்ந்துநீபோவெனவே
தந்தையருமண்ணமார் தானுரைத்தவாசகத்தை
சிந்தைதனில்கேட்டுத் திடுக்கிட்டுமெய்பதறி
நாருசத்தைச்செவியில் நன்றாகவேகாச்சி
பூறவும்வூத்தியதைப் போலேயிருந்தனளே
நின்றுதிகைத்து நிலத்திலேசாயுளந்த
அன்றிலைப்போல்வாடி அடவிபுனங்கடந்து
கணவன்றனைப்பிரிந்த கவலைமிகவுண்டாகி
துணைவியுடன்கூடி தொடர்ந்துவழிபோகையிலே

விருத்தம்.

காவின்வளர் கரிபிநகம் காடைநவுதாரி கான்கோழி கரியருபிலே
மானின்வரையாடு புலிவானளவுலாவுநெற வனமேவுகின்றசெடியே

பானின்மதி யுயரளவு பறந்துவருபக்ஷிகளே பரமனருள் பாலன்வருவார்
தேனினிய பாகுமொழி சேடியுடன்வள்ளிநகர் சென்றணளெனநவிலுவீர்

அம்மானை.

கரியேகவுதாரிபுரு காடைகான்கோழிகளே
நரியேவரையாடே நாங்கணவாய்ப்புள்ளுகளே
பன்றியேவானரமே பரும்புலியாளிகளே
அன்றில்சென்று யாந்தையுடன்காகங்களே
கொக்குகுருக்ஷிகளே கோட்டானிளங்கிளியே
பக்குருளைத்தூக்கணனே பருவயிரிசிட்டுகளே
மானேமரையே மயிலேகுயிலினமே
வானேயளாவிநிற்கு மரமேபுற்பூண்டுகளே
கரங்களைத்தான்கூப்பி கைதொழுதங்கேதுசொல்வாள்
வரம்நிறைந்தவென்கணவன் வந்துமேயெந்தனையே
தேடினராமாகில் சேடியுடனூர்தனக்கு
நாடிப்போராளெனவே நவிலுந்தயவுடனே
வேண்டியேகால்கள் மிகவேயெழும்பாமல்
தூண்டிநடக்கமனம் துணிவொன்றுமில்லாமல்
போராளெனவே புகல்வீரன்நாயகற்கு
கூறுமற்போனால் கொடும்பாவம்பொல்லாது
என்றுமேசொல்லி எண்ணிப்பலவிதமாய்
ஒன்றுபடமனத்தை யொருவார்த்தையாய்த்தேங்கி
நாயகனைத்தான்பிரிந்து நடக்கமனமில்லாமல்
நேயமில்லாமல்த்தனியாய் நீள்பதிபோய்ச்சேர்ந்தனளே
சேர்ந்துகுணங்கள் திகைத்துமேவேறுபட்டு
சோர்ந்துபழையபடி தோழியருடன்கலந்து
கொஞ்சிவிளையாடமனக் குறிப்புகளுமில்லாமல்
வஞ்சியர்கள்தன்னை மனதுடனேபாராமல்
பிரியமாய்ப்பார்த்து பேசமனமில்லாமல்
பரிவாகவம்மானை பந்துகளுந்தானுருட்டி
சிறுவீடுதான்முதலாய்ச் செய்துவிளையாடுதற்கு
வருவாரைப்பார்த்து மகிழுமனமில்லாமல்
அதிகவாட்டத்துடனே அம்மன்மனம்வருந்தி

பதிமயக்கித்தானு மார்புபட்டகாலையிலே
குறவர்குலக்கொழுந்து கோதைவள்ளிநாயகியாள்
வாலையறிந்துஅன்னை வளர்த்தவளுமோடிவந்து
ஆவலுடன்கட்டி யணைத்துமடியில்வைத்து
காவலுக்குப்போன கன்னியுச்சிதான்தடவி
தலைதனையேகோதி தாயெனவேமுத்தமிட்டு
கலைமதிபோல்வதனக் கன்னியேயென்தாயே
பலநாளாய்க்கொல்லையிலே பக்ஷிதனைக்காத்து
விலகிமிகவருந்தி வெயிலாலேவுன்னுடைய
தேகத்தின்காந்தி தியங்கிவளைசோர்ந்து
தாகத்தால்திரேகம் தளர்ச்சிமிகக்கொண்டாயோ
என்றுபலவிதமாய் யினியசொற்களால்வினவ
நன்றாய்ச்செவிகொடுத்து நவின்றதையெல்லாங்கேட்டு
நகைமுகமாய்ப்பழைய நன்மனத்தோடேகுலவி
திகையாதுகோகிலம்போல் திகைத்துத்தலைகவிழ்ந்து
துக்கித்திருப்பதைத்தான் துரிதமாய்த்தானறிந்து
தக்கித்துத்தாயேயுன் தங்கத்திருமேனி
வேறுபட்டுக்காட்டி மிகவார்த்தைதான்பேசி
மாறுபாடானதுபோல் வார்த்தையுரையாமல்
மதிமயங்கிக்கொண்டு மனந்தியங்கியிருப்பதுதான்
விதிபோவதென்னகுறை விளைவந்துநேர்ந்ததற்கு
காரணமின்னதென்று கருத்தில்மறையாமல்
பூரணமாய்ச்சொல்லவே புரிந்தேபயமுறுத்தி
கேட்டும்மேகோபமதாய் கிளிமொழியாளைப்பார்த்து
பூட்டுத்தானுன்வாயில் போட்டுமிருக்கிறதோ
என்றவர்களாலே யியன்றமட்டுந்தான்கேட்டு
ஒன்றும்வெளியாகாமல் வுளங்கலங்கியேபயந்து
இதுவென்ன அன்யாய மிப்போதிருக்கிறது
மதுரமொழிவள்ளி மனவருத்தப்பட்டவள்போல்
இருந்தவளையோரறைபி லிருத்திவைத்துமேல்பார்த்து
பொருந்தவேவைத்து போற்றிவருமபோது
சித்திரப்பதுமையெனத் தெய்வச்சிலைவள்ளியம்மன்
வெத்திவேல்மூர்த்திதனை மிகவன்பாகக்கலந்து

இன்புற்றிருந்தவள்தா னிணங்கியவருடனே
அன்புற்றுப்பேசி யவரிடத்திற்சொல்லியேதான்
வாராமல்வந்ததினல் மனவருத்தமுண்டாகி
நீருமல்வெம்பி நிறமுமுருக்குலைந்து
பிர்மைமேலாக பிராணவஸ்தைகொண்டவள்போல்
திரமுஞ்செயலழிந்து சேயிழையும்வீழ்ந்தனளே
செய்கைகண்டதாய்முதலோர் திடுக்கெனவேயோடிவந்து
கையினல்வாரிக் கனகமார்போடணைத்து
மங்கையரைத்தூக்கியன்னை மடியின்மீதேயிருத்தி
சங்கையில்லாமலப்போ சகலருமேசூழ்ந்துகொண்டு
துக்கக்கடலழுந்தும் தோகைவள்ளிநாயகிதன்
மிக்கவடிவை மிகக்குறிப்பாய்த்தான்பார்த்து
மேனிதுவண்டழகு மெய்காந்திதான்மயங்கி
வானிந்திரவில்லெனவே மார்நரம்புதானுகி
கரங்கள்மெலிந்துவளை கங்கணங்கள்தானழுவி
பாவும்விழிகளில்நீர் பரிந்துததும்புவதும்
கொங்கைகளிற்செங்கைகக் குறிபட்டிருமாந்து
மங்கைநல்லாள்செவ்விதழும் மாசைப்போலேவெளுத்து
இருக்கும்குறிப்பதனை யேந்திழைகள்தான்பார்த்து
கருவாகவேறுபல காரணங்கள்தான்பேசி
வேலாயுதன்புரிந்த விந்தையறியாமல்
காலாவிதமெண்ணி நவின்றனர்காணம்மானை.
மலைமீதிருக்குந்தினை மாபுனத்திலொன்றிபதாய்
கலைமிருகம்பச்சிகளைக் காத்திருக்குங்வேளையிலே
வள்ளிமலைச்சாரலிலே வாழ்ந்திருக்கும்தேவதையால்
துள்ளிப்பயந்தெருது தோற்றமுநாமறிவோம்
களைப்பட்டுச்சோபமுற்றுக் கண்கள்திறவாமல்
வளையிட்டகையாள் மனந்திகைத்தகாலையிலே
அன்னையுந்துதுவரை அவசரமாய்த்தானழைத்து
மின்னலைப்போலோர்நிமிஷம் விரைவாய்ப்புனமேவி
எனதுகணவன்மக்கள் யெல்லோர்க்குஞ்செய்திசொல்லி
மனவேகமாயவரை வரச்சொல்லுமென்றனுப்ப

தூதர்விரைவாய்ப்போய் துரிதமுடன்செய்தியெல்லாம்
ஓதவேகேட்டப்புனத்தை யுடனீங்கியூரில்வந்தார்

விருத்தம்.

ஓடிஞரெலாமொரு நிமிஷந் தன்னில்
பாடிதன்னில் பதறியே வந்துமே
நாடிவள்ளி நயனத்தைக் கண்டுளம்
வாடியேதன் மனத்திடை யெண்ணினர்.
எண்ணிவேட விறைவிமூ தாட்டியும்
நண்ணிச் சண்முக நாதனிவர்களை
மண்ணிலேபல வர்க்கமெலாம் வைத்து
புண்ணியாவெனப் போற்றிப் பணிந்தனர்.

அம்மானை.

தந்தைவேடப்பெருமான் ருனுமற்றவேடுவரும்
சிந்தைமதிமயங்கித் திடுக்கிட்டுக்கேட்டவுடன்
ஏகமாய்ச்சேர்ந்துவந்த யேந்திளையாளைப்பார்த்து
தாகமாய்ச்சோபமுற்றுத் தற்சணத்திலேயவர்கள்
குலதேவதையான குறவர்மூதாட்டியையும்
நலமாய்முருகனையும் நல்லமுறைப்படியே
வாசனைப்பூமாலைபல வகையெல்லாங்கொண்டுவந்து
பூசனைகள் தான்புரிந்து போற்றியேதான்பணிந்து
வடிவேலவர்தமக்கு வகைவகையாய்நன்மலரை
அடிமலர்த்தாள்தூவி யாரமதுதான்சாத்தி
தீபதூபங்கொடுத்துத் தினையாப்யாற்சோறுகளும்
பாயனைபாய்வெவ்வேர் பழவர்க்கந்தான்படைத்து
வேடர்களும்தீர்க்கதண்ட மிகவேதான்செய்திடவே
தேடரியவேலவரும் திருவுள்ளந்தானிரங்கி
ஆவேசமாயொருவ னுடல்மிகவேபுரிந்து
மாவேசமாகவருள் வர்தேயிறங்கிடவே
சந்தாகடம்பா கதிர்வடிவேல்தான்படைத்த
செந்தாகுமரா செட்டிக்குருபரனே
முருகாமுருகாவென்று முழக்கமுடன்ருனுடி
வருகையிலேவேடர்சிலர் வந்துமுதியரும்போய்

தூபதீபங்காட்டித் துதித்துக்கரங்கூப்பி
தாபமதாய்யெங்கள்குலச் சாமியேயென்றுசொல்லி
ஆறுமுகம்படைத்த அய்யனேசெவ்வேளே
வேறுவினைவாராமல் வினைகள்தவிர்த்தாளுமய்யா
கன்னிக்குவந்திருக்கும் கடினமாங்குற்றமதை
மன்னித்தருக்காத்தின்ன வகைவிபரமாயெனக்கு
இன்னவிபரமென்ன எனக்கிங்கெடுத்துரைத்து
நன்னயமாய்வாக்கால் நவின்றுநிவர்த்தனையும்
கடாச்சித்துத்தானுங் காப்பாற்றவேணுமென்று
திடாசித்தமாகத் திருத்தாளைப்போற்றிடவே
அருள்பிடித்தவன் றானுமதட்டியடாபபலே
இருள்பிடித்திருக்குதென்று யெண்ணிமனமவா...
மற்றொன்றுமில்லையிந்த மன்னவன்தன்புத்திரிக்கு
குற்றமில்லாமற்புனத்தை கொடுங்காவல்தான்கார்த்து
தனியாயிருக்குந் தருணமதிலவளழகை
இனிதாகக்கண்டுமெப்போ யிச்சைமிகவுண்டாகி
நான்தான்தொட்டேனெனவே நாடியேயெந்தனுக்கு
தான்தான்மிக்கமுடன் சகலவாடம்பரமாய்
பூசைமிகச்செய்தவளைப் பொருந்தவேயெந்தனுக்கு
ஆசைவெறியாடல்களுக் கமையும்படிசெய்தாக்கால்
கண்டிருக்குமயக்கங் காரணங்களானதெல்லாம்
கொண்டிருக்குந்துறைதீர்ந்து துணையாகமுன்னிலுமே
பதின்மடங்குதான்சவுக்யம் பட்டுமகிழ்ச்சியுடன்
மதியுடனேதானிருக்க வைப்பேனெனவுரைத்தார்.

விருத்தம்.

சொன்னதோர் குறிப்புங்கல்ல சொற்சாரமனைத்துங்கேட்டு
நன்னயமுடனேவள்ளி நாயகி மனம்பூரித்து
வின்னமில்லாமல் கண்ணை விழித்துமே பார்த்துமன்பாய்
அன்னை தந்தையைத்தான்கண்டு அருளுடன் பேசினானே.

அம்மானை.

சொன்னகுறிப்புகளும் சொற்சாரிசமனைத்தும்
வின்னமில்லாமலப்போ வினயமாய்த்தான்கேட்டு

சொல்லிமுடிந்தவுடன் சுப்ரமண்யர்வார்த்தையதை
மெல்லிநல்லாள்வள்ளியம்மை மிக்கசெவிகளிலே
அமுதமெனப்பாய்ந்துமவ ளங்கமதுதான்குளிர்ந்து
கமுகுநிகர்க்கந்தரத்தாள் கண்கள்தனைவிழித்து
மெல்லமெல்லப்பார்த்து மிகவன்னைதந்தையுடன்
சொல்லாலுரையாடிச் சுகமாகத்தானிருந்தாள்
இந்தக்குணமானதொரு யினியசொல்லைக்கண்டவுடன்
சிந்தைமகிழ்ச்சியதாய்ச் சிறப்புடனேதாயாரும்
முருகனைத்தானினைந்து மொய்கழலிற்றான்பணிந்து
திருவுளந்தானிறங்கி சிந்தைமகிழ்ந்திருக்க
உற்சவந்தானடத்தி வுனதுசிறப்புக்களை
பச்சமுடன்செய்வோம் பாவையரைக்காப்பதுவும்
உமதுபாரமெனவே யுருதியுடன்போற்றிசெய்து
தமதுமனதில்நல்ல தயாளமுடனேநினைத்து
மஞ்சத்துணிநனைத்து மருவில்லாநெல்முடிந்து
வஞ்சமணுவாராமல் வள்ளிதிருக்கரத்தில்
கட்டியமஞ்சரியும் கானவர்வீட்டிலிருக்க
மட்டில்லாவேடராசன் மகிழ்ந்தானந்தத்துடனே
முருகனுக்குவுற்சவந்தான் முழக்கமுடனேநடத்தி
சருவசாக்கிரதையாய்த் தான்முடித்தாரம்மானை.

விருத்தம்.

புனத்திற்போய்க்கதிரறுத்துப் புனிதமாயடித்தேயங்கு
பனத்தினில் தயாளமாக வருந்திரை யாறிலொன்று
தனமென வாங்கியங்கு தான்பிச்சை நல்கிமிச்சம்
தினைதனைக் கொண்டுவந்து சேரியிற் சேர்த்திட்டாரே.

அம்மானை.

கதிர்கள்முற்றிச்சாய்ந்ததினால் கான்வேடரெல்லோரும்
சதிராகத்தங்கள்தங்கள் தந்தேவிமார்களுடன்
கூடிப்போய்க்கதிரறுத்து கூட்டிமிகவடித்து
நாடியொப்படிகள்செய்து ராசனுக்குத்தானுரிய
கடமைப்படிகொடுத்துக் கனைப்பிச்சையாசகர்க்கு

திடமுடனேதானீந்து சேர்ந்தமிகுதித்தினையை
இல்லத்தில்கொண்டுவந்தே இயல்புடனேதான்சேர்த்து
நல்லபந்துவர்க்கமுதல் நல்லசிநேகிதரும்
பரதேசிகளுடனே பண்பாகவேபுசித்து
சரசவுல்லாசமதாய் தானிருக்கும்வேளையிலே
வள்ளிவரையிடத்தில் மாவள்ளிநாயகியை
புள்ளிமயில்வேலன் புணர்ச்சியதுசெய்திருந்த
மறுநாளின்காலையிலே வழக்கப்படியாக
உருமாறிமுன்போலே வுடனேசெம்பீரமதாய்

## கொச்சகம்.

வையகமே வானே மங்குலமே யேகவெளி
வெய்யவனே சந்திரனே விண்ணுடுக்களே கேளீர்
மையிலகும் கூந்தல்மின்னாள் வள்ளியெந்தன் நாயகியாள்
சையோக மாகவழி தான்வரவுங் காணீரோ.

கரிசிம்மம் வேங்கை கரடிமரை வெண்கவரி
நரிபுல்வாய் பன்றிகளே நான்சொல்லக் கேட்டருள்வீர்
விரைசேரும் பூங்காவில் விளைந்ததினைக் காத்திருந்த
உரியகுற மின்னாளுலாவிவரக் காணீரோ.

மான்மரையே செந்நாயே மந்திவரை யாடுகளே
நான்தா னோர்வார்த்தை நவிலுவதைக் கேட்டருள்வீர்
வான்தாவியே விளைந்து மலிந்ததினை காத்திருந்த
தேன்போல் மொழியுடைய தேவிவரக் காணீரோ.

மயிலே கான்கோழி வாத்துக்களே தாராவே
குயிலேசெம் போத்தேகருங் கோகிலமே கேட்டருள்வீர்
அயில்போல் விழியுடைய யாரணங்கு வள்ளியம்மை
ஓயிலாக யிந்தவழி வுகந்துவரக் காணீரோ.

தூக்கணமே கிள்ளை சொகுசான அன்னங்களே
காக்கை வலியானே கருத்தாகக் கேட்டருள்வீர்
நோக்கும் தினைப்புனத்தை நோகாமல் காத்திருந்த
தேக்கிலையில் மாக்கொடுத்த தேவிவரக் காணீரோ.

சிட்டுகளே கத்தும் சிவக்காடைக் கோட்டானே [வீர்
மட்டில்லாப் பீனிகளே வார்த்தையொன்று கேட்டருள்

நட்டபரண் மீதிருந்து நற்றினையைக் காத்திருந்த
பட்டிடையா ளென்தேவிப் பாதைவரக் காணீரோ.
மலையே யருவிகளே மாந்தோப்புச் சோலைகளே
அலைமோதும்பொய்கைகளே யன்புடனேகேட்டருள்வீர்
சிலைநுதலா ளெந்தன் திருத் தேவிவள்ளி யென்னும்
கலைச்சாயற் கண்ணால் கன்னிவரக் காணீரோ.

அம்மானை.

வந்து திருத்தேவியைத்தான் வனப்புனத்திற்காணாமல்
சிந்தைகலங்கிமனம் திகைத்துமதிமருண்டு
சித்தப்பிரமைகொண்டு செய்கைபலதான்பேசி
அத்தலத்தைவிட்டேகி யவ்வரையெல்லாமலைந்து
ஒன்றுந்தோன்றாமலே நாவுலர்ந்துமனந்திகைத்து
என்றுமேவானி லெழும்பிவருமேகங்களைப்
பார்த்துத்தினைப்புனத்தை பக்ஷிகள்கொய்யாதபடி
காத்துக்கொண்டேயிருந்த கன்னிகையாள்போனவிடம்
தெரியுமோவென்று செப்புமெனவேவினவி
அரியவனச்சோலைகளே வன்புடனேவுங்களிடம்
களித்திருந்தநாயகியைக் காணீர்களோவெனவும்
அளிசூழ்ந்தமாதாவி யடர்ந்தவனங்களிற்போய்
மயிலினங்களைப்பார்த்து வள்ளியம்மையிந்தவிடம்
ஒயிலாகவந்திருந்தா லொழியாமல்சொல்லுமென்று
கெஞ்சித்தினைப்புனத்தினமே கிட்டிப்பலநாளாக
வஞ்சிக்கொடியிருந்த வனவேடமங்கையரை
எவ்விடம்நோக்கியேகினாள்சொல்லெனவும்
இவ்விடத்திலேயிருக்கு மினியதொருபூவைகளே
சாடைகவுதாரிகளே சம்புள்களேயான்கிளியே
கூடைவலியான் கொக்குபுறவான்கோழி
கரிபுலியேவோனாயே கருங்குரங்கேமந்திகளே
நரிசிம்மம்புல்வாயே நற்கொடண்செம்போத்தே
யானையுங்கள்குலத்தில் வந்துதித்தபெண்ணரசி
தானேயுன்கூட்டமதில் தாவிவரக்கண்டாயோ
தோப்புகள்சோலையிடத்தே தோன்றுகின்றதென்றனுக்கு

தாப்பாசவங் குலவிச் சஞ்சரித்துநிற்பாளோ
என்றுமனதிலெண்ணி யிளந்தோப்புச் சோலைகளும்
குன்றுதொறுஞ்சென்று குறிப்பாகத்தான்கேட்டு
தாகமதுதீர்க்கமுன்னம் தான்போனமாசுனையில்
வேகமுடன்சென்று விரைவாகத்தான்பார்த்து
முந்தச்சுனைகாட்டுதற்கு முறுவலொளியுடனே
வந்தயெந்தன்நாயகிதான் வந்ததுண்டோயிவ்விடத்தில்
இப்படித்தான்காட்டி லெங்கும்வனங்களெல்லாம்
அப்படியேதேடி ஆயிழையைக்காணாமல்
கூவியலைந்து குணமதுவும்வேறுபட்டு
தாவிமனத்தூக்கமுற்றுத் தானேதானெஞ்சுலர்ந்து
காமக்கவலை யுற்றுக்களைத்துநடுநடுங்கி
தாமதமில்லாமல்வள்ளி தன்னடியைத்தாநாடி
திரிந்துகுறவகைளைத் தேடியெங்குங்காணாமல்
வருந்தியலைந்தேதான் மலைத்திருந்தாரம்மானை.

விருத்தம்.

வருவதிக் காரணந்தான் மனதிடை யெண்ணும்போது
குருபரக் கந்தன்செய்த கோதிலாப் பொருள்களேதான்
திருவிளை யாடலாலே செகத்தினில் வேறுமுண்டோ
பருவமாய்ப் பகலைப்போதை பரிவுடன் களித்திட்டாரே.

இதுவுமது.

களித்துமே பகலவன்போய் காரிருள் வந்தபின்னே
வழிதனை நோக்கிச்சிற்றூர் மாநகர் தனக்குச்சென்று
விழித்திடா துறங்கும்போது வேடுவர் தனைச்சோதித்து
ஒழிந்துமே குடிசைப்பக்கம் ஒருசைகை காட்டிநின்றார்

அம்மானை.

இக்காரணங்களைத்தான் யெண்ணிப்பார்க்குமிடத்தில்
மிக்கவானசேனைபதியாய் விளங்குகுமரேசர்செய்த
திருவிளையாடலல்லால் சிந்தைதனில்வேறுமுண்டோ
சருவதுந்தான்மேலே தான்சொன்னவாறதுபோல்
தனக்கின்பந்தந்துநல்கும் தையல்வள்ளிநாயகியும்

புனக்காவிடங்களெல்லாம் போயலைந்துதேடியபின்
பகலவன்றானன்று பரிவுடனேமேற்கே
இதஞ்செய்வதுபோல யிருள்வந்துசேர்ந்ததுவே
தினைப்புனமெங்கும்பகலில் தேடிக்கடைசியிலே
மனைதனிலேவேடுவர்கள் மயங்கியேதூங்கவிட்டு
மெல்லமெல்லவேலன் மேவிச்சிற்றூரடைந்து
வில்லம்புதான்பிடிக்கும் வேடுவர்கோமானுடைய
குடிசையின்பக்கமதில் குந்திப்பதுங்கிநின்று
வடிவாங்கரங்கள்தட்டி மறைந்துசிலசைகைசெய்தார்
சைகைதான்வேலன் தான்செய்யவேகேட்டு
தையலாம்பாங்கியரும் தானேமிகவிழித்து
இப்படித்தான்நேருமென்று யிருந்துமுன்னமேதெரிந்து
அப்படியேமனக்கவலை யாலேநித்திரைசெய்யாமல்
படுத்துப்புரண்டிருந்த பாங்கியருங்கண்டவுடன்
அடுத்துமெல்லவெளியி லய்யன்சுப்ரமண்யனைத்தான்
தரிசித்தடிபணிந்து சாமியேயிப்போது
சரியாய்நடுவிரவில் தானிவ்விடம்வருவதுதான்
தகாதுநீங்களிருபேரும் தான்கலந்தேயின்பமுற
அகாதமாயிப்பதியி லானவிடமுமில்லை
அப்படியேநேர்ந்தபின்பு வாரணங்குபெண்கொடியாள்
எப்படியுமுமைப்பிரிந்து யிவ்விடத்திலேயிருக்க
சங்கடமதாயிருக்கும் தாய்வள்ளிநாயகியை
உங்களூர்கொண்டு போனாலுமிஷ்டப்படிக்கே
கூடிக்குலாவி கொஞ்சிமிகவேயிருப்பீர்
நாடியவர்சம்மதிக்க நன்றாகவேயுரைக்க
பாலசுப்ரமண்ய பகவானையங்கிருத்தி
கோலவிழித்தாதியரும் குடிசைக்குள்தானுழைந்து
வள்ளிநாயகியாரும் மாதாவின்பக்கமதில்
பள்ளிகொண்டுதானிருக்கும் பதிவாமிடத்தணுகி
காதிலேவாய்புதைத்துக் காரியமாய்த்தாயேயென்று
ஓதியேயுன்னுடைய வுற்றகொழுநனுமே
பிரிந்துமனம்வருந்தி பின்னேமிகத்தளர்ந்து
அறிவிழந்துனைக்கவர்ந்தே யவருடையதன்பதிக்கு

கொண்டுபோகும்படிக்குக் குறிப்பாய்மனதிலெண்ணி
கண்டுகேட்டோசிப்புறத்தில காத்துமேதானிருக்கார்
விரசாய்ப்புறப்படென்று மெதுவாகச்சொல்லிடவே
அரசன்மகள்தான்கேட்டு அச்சணத்திலேமகிழ்ந்து
தேகமிகப்பூரித்துச் சிந்தைமகிழ்வாக
ஏகமனதாயவளு மிவ்வாறுசெய்யெனவே
ஒருமித்துத்தாய்தந்தை யுறங்குவதைத்தானறிந்து
பருவமுடன்சுற்றத்தார் பார்வைக்குத்தோணுமல்
உறங்குவதைச்சாடைகளா லுறுதியுடனேபார்த்து
அரவமிலாமலவர்க்கு அணுவளவுந்தோன்ருமல்
விழித்துக்கொண்டேயிருக்கும்வேட்டைநாய்க்குத்தோணுமல்
ஒழிவாகத்தானுமப்போ வூரொடுங்கும்வேளையிலே
பாங்கிகரம்பிடித்து பாதவொலிகாட்டாமல்
தாங்கியேமெல்லமெல்லத் தானேதான்கூட்டிவந்து
கடையிலேசேர்ந்தவுடன் நற்றுப்பாளேவிலக்கி
தடையில்லாமல்கதவை தானேமிகத்திறந்து
தாயகமாம்வள்ளிதனைத் தான்வெளியிற்கொண்டுவந்து
மாயமதாய்ச்சேர்த்தபின்பு மலைவேடன்புத்திரியும்

விருத்தம்.

ஆவலுடன்கணவன்றன்னிருதாள்போற்றியடியாளுமிகவணங்கி யன்பாய்ச் சுவாமி, தேவரீரிறிந்தவிருட்காலந்தன்னிற் றிருத்தாள்கள்நோகிடவேதுணையில்லாமல், பாவவினைசெய்யுமிழி குலத்தோனில்லில் பதுங்கியே நிற்கவுந் தான்விதியோ வென்று, தாவந்தமாயடியாளா விங்குவந்தீர்தற்காக்கவேணு- [மெனத்தானின்ருளே

அம்மானை.

ஆவலுடன்கணவனைத்தா னன்பாயெதிரில்வந்து
தேவதேவாவென்று சிந்தித்துத்தான்வணங்கி
இழிகுலத்தில்வந்துதித்த வீணக்குறவர்குடிசில்
வழிதெரியாதவிருளில் மலர்ப்பாதந்தானேக
நாயினேன்பொருட்டாக நற்றுணையுமில்லாமல்
வேய்முதலாயனேக விருக்ஷமதுசூழ்வனத்தில்
தனியாகத்தேவரீர் தான்வந்தகாரணத்தால்
இனித்தானடியாளை ரக்ஷிக்கவேணுமென்று
பரிதாப்பட்டுமப்போ பணிந்துகரங்கூப்பி
சரியாந்தவக்கொழுந்தி தானங்குநின்றிடவே
தோழியுந்தானப்போது சுப்ரமண்யரைப்பார்த்து
வாளியுடன்வில்லும் வாளாயுதம்பிடித்து
குலைகள்முதலானதொரு கொடியதொழிலேபுரியும்
மலைவேடரானவர்கள் வந்துமேகண்டாக்கால்

கெடுதிமிகவேவிளையும் கிருபையுடனேஎழுந்து
சடுதியிலேசென்று தன்பதிக்கேயேகுமென்று
தாவசமாயிந்தத் தையல்தனைக்காப்பாற்றி
தேவரீர்காத்துமிகத் திருக்கருணைதான்புரிவீர்
அருமையாய்ச்சீராட்டி யன்பாய்வளர்த்தபெண்ணை
உருமையாய்க்காரு முடிதடைக்கலமாக
தலைவியின்கையைமுருகர் தன்கரத்திலேகொடுத்து
குலவியிருமெனவே குப்பிட்டடிதொழுது
போற்றியேகாலையிலே புனிதவடிவேல்முருகர்
தேற்றியபெண்ணவட்கு இடமாய்ப்பரிபூரண
கிருபையதாய்த்தான்பார்த்து கேகயமேபெண்ணணங்கே
அருமையாயெந்தனுக்கே அளித்ததையெப்போது
மறக்கமாட்டேனெனவே வடிவேலர்தான்கூறி
இரக்கமுடன்வள்ளிதனை யின்பமுடனேதழுவி
தழுவியவரிருக்கத் தாதியரும்வள்ளிதனை
தொழுதுமிகவன்பாய்த் துதித்தவளும்மதுசொல்வாள்
தாயேகுமரகுரு தான்கணவனையமைந்த
நீயேகுறையில்லாமல் நேர்மையுடனவர்கருத்தின்
படியேநடந்துகொள்ளும் பண்பாயவர்தனக்கு
அடிமையாய்நீயிருந்து அன்பாகவேசேர்ந்து
கூடப்போய்வாருமெனக்கோரிச்செலவுபெற்று
நாடவேதான்றிரும்பி நற்குடிசையுட்புகுந்து
கதவைமிகவடைத்து கருத்தாகவேபடுத்து
இதமாகத்தானுமப்போ யின்பநித்திரைசெய்திருந்தாள்
தோழியுஞ்சென்றபின்பு தோகைதிருத்தேவியுடன்
ஆழியிலேதுயின்ற வாயன்மருகன்குகனும்
பாதிராத்திரிவேளையிலே பாராவெல்லாங்கடந்து
கோதில்லாச்சிற்றாரின் குடிசைவிட்டேநடந்து
முல்லையசோகுமலர் முழுநீலஞ்சூதகப்பூ
அல்லிமலரான வணங்கனெய்யுமபாணமுடன்
கோங்குகுருக்காத்தி கொன்றைபிச்சிரோஜாவும்
ஓங்கிதளுத்தேவளர்ந்து வுயர்வாசனைமிகுந்த
பூவின்மலர்தனிலே பொங்கித்தேன்கள்ததும்பி
வாவிதடாகஞ்சுனைகள் மலிந்துமிகப்பெருகும்
சோலையிடஞ்சேர்ந்துகந்தர் சொர்னத்திருத்தேவியுடன்
லீலைபுரிந்துமிக நேரமதுசென்றபின்பு
விடியற்காலமானதினால் வேடராசன்மனைவி
வடிவுள்ளதன்மகளை வளையலணிகையாளை
பக்கமதிலேகூட படுத்தவளைக்காணாமல்
திக்கெனவேதான்பதறி திடுக்கிட்டுத்தானெழுந்து

விட்டறைகள் முற்றும் வெளித்தாவாரமனைத்தும்
நாட்டமுடன்பார்த்துவள்ளி நாயகியைக்காணுமல்
பாங்கியைத்தானெழுப்பி பாவைநகைபேசுசொல்வாள்
தூங்கியவள்ளியெங்கே சொல்வாயெனவுரைக்க
தாயேமுன்சாமமதில் தையலுடனேநானும்
நேயமாய்த்தங்கள்பக்கம் நித்திரைதான்செய்ததுண்டு
அதன்பின்புயெந்தனுக்கு யாதுந்தெரியாது
இதமாய்மருவார்த்தை யியம்பவேதாய்கேட்டு
அனலில்மெழுகதுபோ லாவிமிகவேயுருகி
மனதிற்கிலேசமுற்று மணவாளனையெழுப்பி

## கொச்சகம்.

குரிஞ்சிப் பதியரசாள் கோலாகல வேந்தே
சிறியா ளுரைக்குமொழி தேவரீர் கேட்டருள்வீர்
கரியகுழல் வள்ளியம்மை கானக்குயில் மொழியாள்
பரிவாயென்முன்பு நித்திரை பண்ணினவளைக் காணும்

வேடர் வேடர்க்கரசே மிக்கமுள்ள யென்கணவா
வாடாத மாலையணி மார்பனே கேட்டருள்வீர்
மாடநிகர் குடிசை வழிக்கதவைத்தாளடைத்து
கூடப்படுத்திருந்த கொம்பனையைத் தான் காணும்

மதமுடைய துஷ்டர்களை மடக்கிக் கருவறுக்கும்
விதமுடைய யென்கணவா வினவுவந்தக் கேட்டருள்வீர்
பதமுடைய வள்ளியம்மை படுத்துநித்ரை செய்தவள்தான்
கதவடைத்த வாசல்வழி காற்றைப்போற் சென்றுளே

## அம்மானை.

என்பிராணநாயகனே யென்னசொல்வேன் நமது
அன்புடையபெண்ணணங்கா மாயிளையைத்தான்காணும்
என்னுடனேகூட யிரவில்படுத்திருந்த
கன்னிவள்ளிநாயகியைக் காணேமெனவேங்கி
எந்தவழியாய் எவ்விடஞ்சென்றுளோ
இந்தவிதமென்று யெனக்குத்தெரியவில்லை
என்னதான்செய்வேனென்றே யேங்கிப்புலம்புவதை
மன்னன்நம்பிராஜன் மதிமயங்கியேயுடனே
பாபஞ்செயசிந்தையுடன் பதட்டமதாய்த்தானெழுந்து
கோபமவடவாக்கினிபோல் குமுறிமிகச்சீறி
ஊர்க்காவலைக்கடந்து முற்றமதுமனை
பேர்க்காவலைத்தாண்டி பெண்ணைத்தைரியமாய்
கொண்டுபோனகள்வனைத்தான் கூறுமேதகைமைக்கு
தண்டனைகள்செய்து தனியறையில்வைப்பேனென
சல்லடத்தைத்தான்மாட்டி தட்டியிடையிறுக்கி

வல்லவாளாயுதத்தை வலப்புறத்திலேசொருகி
அன்புடனேவில்லதனை ஆங்காரமாய்ப்பிடித்து
தென்புடனேகன்னிதனைத் திருடினவன் தன்னடியை
நாடியந்தவழியாய் நடந்ததிககோபமுடன்
தேடியேவேடராசன் தீர்க்கமுடனேநடந்த
செய்திதெரிந்தவுடன் திசைகட்டுக்காவலுக்குள்
ஏய்திச்சிறைகவர்ந்தே யெடுத்துமேபோனவனை
சும்மாவிடலாகாது துடர்ந்துமேதான்பிடித்து
விம்மக்கட்டிக்குத்தி மிகச்சிறையில்வைப்போமென
பற்பலவீரங்களையும் பகர்ந்துசிலவீரர்
அற்புதமாய்ச்சல்லடத்தை அவசரமாகத்தரித்து
வாள்பிண்டிவேல்வலையும் வரிவில்லுமம்புடனே
தாழ்வில்லாயுத்த சனுத்தராய்சேரியிலே
இருக்கின்றவீரரெல்லாம் யேகியொருமுகமாய்
ஒருமித்துத்தான்திரண்டே ஊளிவுலவையைப்போல்
கடிகியேதானேகி கடியோன்தனைக்கலந்து
முடிகிப்பறைபம்பை முழக்கியேகொம்பூதி
நடக்கின்றபாதைகளில் நாயகியுஞ்சோரனுட
தடத்தையுந்தான்பார்த்து தானுஞ்சிலபேர்களுடன்
ஓடிவனந்தோப்பில் வுட்புகுந்தே ஆராய்ந்து
தேடிப்பலரோடித் தினைப்புனமெல்லாம்பார்த்து
பலதிசையுமவோடிப் பலவேடர்தான்புகுந்து
சலந்திகள்சந்துபொந்து தாவளமூலைமுடுக்கு
எங்கணுந்தேடி யிறைந்தாரவாரமதாய்
பொங்கவேகோபமுடன் புனத்தில்வரும்போதடுத்த
சோலையிடத்திற்பால சுப்ரமண்யருடன்
வாலைவள்ளிகொஞ்சி வார்த்தைபுரிந்திருக்க
நாயகியுந்தான்தெரிந்து நடுநடுங்கியேபதறி
தூயமுருகன் றுணையடியிலேவிழுந்து
தொழுதுமனம்வருந்தி துடித்துமேதான்திகைத்து
அழுதமுகமாயவர்பா லாரணங்குமேதுசொல்வாள்

விருத்தம்.

எனதுயிர்க் குயிராய்வந்த யெந்தனையனேபாரும்
மனமது கலங்கநொந்தோ வருகிறே னெனதுதந்தை
கனமுடன் சிலவாளேந்தி கானவர் படைகள்சூழ
வனமதை நெருங்கிவாரார்வந்தெனைக் காருஞ்சுவாமி.

அம்மானை.

எந்தன்பிராணநாதா யென்சொலைக்கேட்டீரோ
அந்தவொலிகேட்கிறதே யாரவாரங்களுந்தான்

இனிமோசம்வந்ததுவே யெனவெடுத்துவந்ததற்கு
அனியாயமாகவேதா னநேகமாயுமேவேடருடன்
தந்தைவடிவாக்கினிபோல் தான்சீரிக்கோபமுடன்
குந்தம்வாள்பிண்டிமழு கோணவளைதடியும்
வில்லம்புகட்டாரிபல வேணபடைகளுடன்
வல்லவராயநேக மாவீரர்தான்சூழ்ந்து
வந்ததிங்கச்சோலை மருபக்கத்தில்நெருங்கி
சிந்தையிலேகொடிய தீயகுலபாதகர்கள்
பலநாளுங்கண்டு பழகினவனாதலினல்
உலவாய்மெழுகதுபோ லுருகிறதெந்தன்நெஞ்சம்
இனிமேல்நானசெய்குவது யாதொன்றுந்தோன்றவில்லை
முனிவரேவேடர்மிக முன்பின்னுந்தான்பாரார்
என்னதான்செய்வாரோ யிதற்கேற்றகாரணங்கள்
முன்னமேதான்விரைவில் முயற்சியுடனேதான்
ஜாக்கிரதையாகத் தானிருக்கவேண்டும்
சீக்கிரங்காருமென்று சிந்தைகலங்கிப்பணிந்து
போற்றுந்திருத்தேவியுடன் பூரணகிருபையுற்று
காத்தனதுபத்திமைக்கு களித்தனனீயொன்றினுக்கும்
அஞ்சிடவேவேண்டாம் அதிகவருத்தமின்றி
பஞ்சின்பதத்தாளே பாரில்நீடூழிவரை
வாழ்வாயென்றுதரித்து மங்கைசிகாமணியை
தாழ்வாகாமலிதனை தானேமிகக்கேட்பாய்

சுவாமி சொல் விருத்தம்

கேளாய்முன் மாய்கைவல்லன் கிரவுஞ்ச கிரியில்வாழ்ந்து
மாளாதவரமே பெற்றோன் மரவர பலத்தால்நாளுந்
தாழாத வல்லசூரன் தன்னைவேல் முனையினாலே
மீளாமற்கொன்றேனந்த விபரத்தை யறிந்திடாயோ

உன்னுட தந்தையண்ணர் வுற்றதோர் சுற்றத்தாரும்
நன்னய முடையவேலால் நான்றனைத் துயிரைப்போக்கி
கன்னவே னத்துறத்தானும் கசக்கியே வானில்சேர்ப்பேன்
மின்னநே ரிடையாய்ப் பாராய் வெருவிநீ யஞ்சிடாதே

அம்மானை

மாயனைகபால்வல்ல மாகிறவுஞ்சகிரியை
நேயசயசாலியதாய் நெடுநாளாய்வாழ்ந்திருந்த
தாருகாசூரனையும் தான்முனையிலேபிளந்து
வேறுலகமேற்றிவைத்த வெற்றிவேலாயுதமும்
சிறந்தபடைதானிருக்கச் சோந்துநம்மவரைச்செயித்து
திறமாய்ப்போசெய்யவந்தால் செறுவிலதிமைப்போது
வாட்டவல்லேனிந்த வகையாப்வேடிக்கைகளை

நாட்டமாகியும் நமதுபுறத்தினிலே
இருக்கக்கடவாயெனவே யியம்பியவாக்கியத்தை
பெருக்கமதாய்த்தான்கேட்டு பெண்ணாள்மகிழ்ச்சியுடன்
அப்புறம்பிரகாம லானந்தமாயெழுந்து
சுப்ரமண்யத்தேவர்பின்னே சொகுசாகத்தானிருந்தாள்

விருத்தம்.

வித்தகன் முருகன்பின்னே வேல்விழி வள்ளிநிற்க
அத்தருணத்தில்வேடர் ஆரவாரங்கள் செய்து
மெத்தவே கோபங்கொண்டு வெகுண்டுபற் பலவாய்ப்பேசி
சித்தமுங் கலங்கவங்கு தேடியே சிலர்கள்சென்றார்

சென்றுமே கள்வன்தானும் சிக்கினன் வாருமென்று
குன்றுவர் சிலர்கள்கூவ கொடியவ ருடனேமன்னன்
வென்றுயிர் தன்னைமாட்டி விடுவேனென் றநேகர்சூழ
நன்றுயர் சோலைதன்னை நாடியே சூழ்ந்திட்டாரே

சூழ்ந்துமே வேடர்கோனும் துடித்துமே தீப்போற்சீறி
தாழ்ந்திடா வருகுஞ்சேனை தனக்குமே முந்திச்சென்று
வாழ்ந்திடா நமதுபாவை வள்ளியைச் சிறையேகொண்டோன்
வீழ்ந்திடத் தாடைதன்னில் வீசியே யடிப்பேனென்றான்

அம்மானை.

அத்தருணம்வேடுவர்க ளாரவாரத்துடனே
மெத்தவேகோபமுடன் வெகுண்டாட்டியேயுருட்டி
பற்பலவாம்வார்த்தைசொல்லி பாராமல்தானபேசி
தற்பரனார்பெற்றகந்த சாமிதிருத்தேவியுடன்
இருந்தவொருசோலையிலே யேகிச்சிலர் நுழைந்து
கருதியுற்றுப்பார்த்து கள்வனகப்பட்டானெனவே
வாரும்வாருங்களென்று வலியர்களுந்தான்கூவ
சேருங்குறவரெல்லாம் திரண்டேகமாய்க்கூடி
சோலைதனைவளைந்து துடுக்காகவேயோதி
காலையிலேபின்னணியிற் கலந்துவந்தவல்லெயினர்
பெருமானிதையறிந்து பெருந்தீப்போலேசீறி
வருகின்றசேனைகட்கு மனவேகமாகமுந்தி
நமதுபெண்ணைத்திருடி நாடியேகொண்டுவந்த
எமக்கள்வன்றானும் யிந்தப்பெருஞ்சேனைகளை
வருவதைக்கண்டுசற்றும் மனவச்சமில்லாமல்
முறுவலொளிகாட்டி முற்றுமசையாமல்
தனித்துநின்றுநமது தாடாண்மையும்வலியும்
முனிவுக்தெரியாமல் மூர்க்கமுடனேயசட்டை
செய்திருக்கின்றானிவனின் திரண்டபுயவலிமையோர்
கைபார்த்திவன்றனையே காணலாமென்றுசொல்லி

தாடைதனிலடித்து சாய்த்திங்கிவன்றனையே
சாடையைப்போல்வாட்டி கருக்கிவிடுமேவாமெனவே
பொங்கிக்குறிஞ்சிக்கிறைவன் போர்வீரரான்வரும்
அங்கியைப்போற்சீறி அலைவாருதிபோல
ஆர்ப்பரித்தாவில்வளைத்து அல்லல்போற்சுடுசரங்கள்
ஏற்பட்டவெய்யோனை யிருள்மேகஞ்சூழ்ந்ததுபோல்
நாற்றிசையுஞ்சூழ்ந்து நற்சரங்களைப்பொழிந்து
மாற்றலர்கள்வந்துபலர் வாதாடுமுன்னிலையில்

விருத்தம்.

வேடர்கோன் முதலோர்விட்ட வெஞ்சரனை யய்யன்மீது
சாடவே சிவலிங்கத்தில் தவத்தவர் சிந்தித்தேற்றி
போடவே மலர்கள்வீழ்ந்து புதுமைபோல் தோன்றவள்ளி
வாடவே நொந்துநீர்கள் மலர்விழி ததும்பச்சொல்வாள்

அம்மானை.

அவ்வாளிமேலிட் டதிர்ந்துசிடுசிடென
தவ்வாளிபோட்டு சடசடனத்தானிறைந்து
கொண்டதிகவேகமதாய் குணமுடையபத்தருந்தான்
தொண்டுமிகப்புரிந்து தொழுதுமிகவர்ச்சனைசெய்
மலர்தான்சொரிவதுபோல் வாலசுப்ரமண்யரின்மேல்
இலகுந்திருமேனிதனி லெங்கும்பாணங்கள்தைத்து
சுத்திப்பலபலென்று சுழன்றபாணங்கள்விழ
பத்தியுள்ளதேவியுந்தான் பார்த்துப்பதைபதைத்து
விழிகளிலேநீர்பெருகி மெத்தக்கிலேசமாய்
அளிமொய்த்தபூங்குழலா ளறிந்தங்கேயேதுசொல்வாள்
கடினகுணமுடைய காதகர்கள்தான்விடுத்த
கொடியபகளியெல்லாம் கூடியமோகமதாய்
தமதுதிருமேனியிலே தாங்கித்தீங்கில்லையினும்
எமதுமனந்தாபரிக்கு தில்லையேயாதலினால்
அடியாளிடத்தி லன்பாய்க்கிருபையுற்று
கொடியதோர்பாதகரை கூறும்வடிவேலாலே
இந்தநிமிசமதில் யிப்போதுங்கொன்றொழிக்கி
எந்தன்மனக்கவலை யிராதபடிதீர்த்திடுவீர்

விருத்தம்.

வீரமேபொருந்துஞ்சிம்மம் விழியாமல் படுத்திருந்தால்
பாரதில் யானைபன்றி பலமிருகங்கள்கூடி
ஓரமே வந்துகாதை வுடன்பற்றி யிழுக்குமென்ற
சாரம்போலாகுநீங்கள் சடுதியில் வென்றிடீரே

அம்மானை.

வீரபராக்கிரமம் மிகவேபடைத்தசிம்மம்
பிரதிவிற்சும்மா படுத்திருக்குமாமாயில்
பன்றிமரையானை புலமிருகமற்றதெலாம்
துளறிப்போய்க்காதை துவளப்பிடித்தேயாட்டி
பரியாசஞ்செய்யும் பாவனைபோலேயாகும்
சரிப்படுத்தியெம்மவரை தாழ்வில்லாமலொழித்து
தள்ளியேகண்டதுண்டம் தானாக்கிவீழ்த்துமென்று
வள்ளியதிக மகிழ்ச்சியுடனபேசிடவே

விருத்தம்.

நல்லதோர் காரியந்தான் நம்மிடந் தனிலுரைத்த
சொல்லதுபோலேயுந்தன் சுற்றமும் பூராவாக
வெல்லவேபோரேனென்று மிக்கதோர்சேவல்தன்னை
வல்லவன் நினைக்கவந்து வணங்கியே கூவிற்றன்றே

கூவிய தொனிதானண்ட கோளமும் வெடித்தாற்போல்
மேவியே சிரையடிக்க வெள்ளிடியெனவே கேட்க
நாவிரைத் தின்றோர்போல நடுங்கியே புவியில்வீழ்ந்து
ஆவியைப் போக்கியேதா னனைவரு மிறந்திட்டாரே

அம்மானை.

நல்லவசனமிது நம்மிடத்திலேயுரைத்த
சொல்லதுபோலதையும் துரிதமுடன்பாருமென்று
திருவாய்மலர்ந்தபடி சேவல்கொடியைநினைக்க
மருவில்லாமற்சிவந்த மலர்க்கொண்டையையுடைய
சேவலதுவந்துகந்தர் சிந்தையதுபோலவேதான்
ஆவலாகவேதா னழகுசிரைவிரித்து
வான்வழியாகப்பறந்து வடிவேலர்முன்புவந்து
தானகழுத்தைநீட்டித் தானேதான்சத்தமிட்டு
ஒருவிசைதான்கூவியதே வுயர்விண்முழக்கெனவே
உருமேறெனவும் ஊழிகாலத்திடிபோல்
பகைவர்செவிகளிற்பட பட்டதொருமாத்திரத்தில்
வகையில்லாமல்நஞ்சை வாரியுண்டவர்போலே
வேடராசன்தனது மிக்கமக்கள் பந்துக்களும்
கூடவந்தவேடர் கோடிதானசேனையெல்லாம்
பிரசண்டமாருதத்தில் பேர்ந்துவிழுமரம்போல்
உடமொழிந்துநைந்து வுடனேபுலன்களற்று
கைகால்தளன்று கருத்துமிகவேயழிந்து
மெய்மயங்கியேயொருவர் மீதொருவராய்விழுந்து

இறந்தாரேயெல்லோரு மிவர்கள்போராடுமுன்னே
சரவணபவனிடத்தில் தானேபரிவாக
அதம்பண்ணிப்போடும்படி யருள்தரவேண்டுமென்று
இதமாகச்சொல்லியதோர் எந்தாயவரிடத்தில்
சகலவுபசாரமெலாம் தான்பெற்றுமகிழ்ச்சியுடன்
சுகமாய்க்குலவியப்போ சுகித்தேயிருந்தவள்தான்

விருத்தம்.

தந்தையு மண்ணன்மாரேழ்வர் தாய்மாமன் சுற்றமெல்லாம்
விந்தையா யிறந்தோர்தன்னை மிக்கமாய்ப் பார்த்துநொந்து
சிந்தையுங் கலங்கிவாடி திகைத்துமெய் பதறியேங்கி
சுந்தர விழிநீர்சிந்த துயரமாய்ப் புலம்பலுற்றாள்

அம்மானை.

இவ்விதமாய்த்தாதை யேழுசகோதரரும்
ஒவ்வியதாய்மாம னுகந்தமைத்துனனினமும்
எல்லாம்ஒருமுனையில் இறந்தகொடுமையதை
நல்விழியாள்பார்த்து நடுங்கிப்பதைபதைத்து
திருமேனியுநடுங்கத் திகைத்துவிழிகளிலே
நீர்தாரைதாரையதாய் நேரேயோடக்கதறி
எண்ணுதயெண்ணமெல்லாம் எண்ணியேசோர்ந்துருக
நண்ணியிக்காரணங்கள் நடப்புத்தெரியாதவர்போல்
திருத்தேவியன்பை தெரியும்பொருட்டாக
பெருக்கமுடனாறுமுகப் பெருமானுருக்கமுடன்
அச்சோலையைக்கடந்தே யருள்வெள்ளம்போவதுபோல்
உச்சிதகெம்பீரமுடன் உல்லாசமாய்நடந்து
போம்போதுதேவி பொருந்துநிழலதுபோல்
சோம்பாமல்பற்றித் தொடர்ந்தாள்காணம்மானை

விருத்தம்.

சமயமே தெரிந்தவேத தவமுனிநார தன்றான்
இமயவர் புரம்விட்டேகி யிப்புவிதன்னில் வந்து
உமயவள் பாலன்வேல னுபயதாள் தன்னைப்போற்றி
அமயமே தணிகைச்செய்கை யதுமுத லுரைசெய்வீரே

அம்மானை.

இந்தச்சமயமதி லிம்மாய்கைதானறிந்து
விந்தையுள்ளநாரதரும் விரைவில்மனவேகமது
போலவேதானுமிந்தப் பூதலத்தில்வந்திறங்கி
பாலசுப்ரமண்ய பகவானைத்தோத்தரித்து
மகிழ்ச்சியுடனய்யன் மலர்ப்பதத்தைத்தான்வணங்கி
சகியாதானந்த சந்தோஷமாய்வாழ்த்தி
கார்த்திகேயவாறுமுகா கண்டும்மைநீங்கியபின்
நேர்த்தியுடனிதுநாள் நேர்மையுடன்நடந்த
செய்கைகளையெல்லாந் திருவுளம்பற்றக்கடவீர்
ஐதீகத்தோர்வேண்ட வதற்குமிகவிரங்கி
நாரதரைத்தான்பார்த்து நாதர்மிகப்பரிவாய்
பூரணமாய்ச்சொல்வேன் புகழுந்தணிகைகடந்து
வள்ளிதனைக்கண்டு வசப்படுத்துங்காரணத்தால்
துள்ளியெதிர்த்த துரைவேடன்வம்மிசத்தை
நாசப்படுத்திக்களத்தில் நற்பதவிசேர்த்தவரை
நேசமுடனெல்லாம் நிகழ்த்தியதைத்தான்கேட்டு
நாரதனுமோர்மனதாய் நாரணனூர்தன்மருகா
காரணசுவாமியென்று கைகூப்பியேதுசொல்வார்
சொல்லியகாரணங்கள் சொகுசாகத்தானிருக்கு
நல்லியல்பாய்த்தேவர் நடித்தவிளையாடல்
எல்லையில்லாதவயாய் யிருந்தாலுமிப்போது
சொல்வதனியாயமதாய் தோற்றுதிதுயெங்குமுண்டோ
தம்மைக்குறித்தநேகர் தவவிரதங்கள்செய்து
இம்மையிலேவருந்தி யேற்றசிறப்பால்கிடைத்த
விண்ணுமண்ணுந்தானளந்த விஷ்ணுதிருமகளை
பெண்ணாகத்தான்படைத்து பேறுபெறச்சீராட்டி
பாராட்டிப்போற்றிப் பரிவாகத்தான்வளர்த்து
தாராட்டிவைத்திருந்த தகப்பன்துணைவரையும்
உற்றார்பெரியோ ருறவின்முறையானதெல்லாம்
அற்றுவிழக்கொன்றங் கடித்துவிட்டபோதினிலும்
தயவுதாட்சண்யந் தானணுவுமில்லாமல்
உயர்வாயதற்காங் குரியநிவாரணமும்

காட்டாதிதுவரையும் களித்தவர்கள் தன்பதியில்
காட்டமுடனுண்டுடுத்தி நாள்தோறுமேவளர்த்த
பதிவிரதைபாதார பதறிமனங்கலங்கி
விதியெனவேவாடி மிகவேவருந்தும்படி
இட்டுக்கொண்டுபோவ தியல்போவுமக்கழகோ
அட்டதிக்கிலுள்ளவர்க ளவமானமாயுரைப்பார்
மூடராய்த்தானிருக்கும் மூர்க்கமுடையவராம்
வேடருக்குத்தேவன் மிக்கமகிமைதெரிந்தால்
இப்பெண்கொடியை யினியதார்த்தமாகவேதான்
ஒப்பமரியாதையுடன் வுமதடிபூசித்தனுப்ப
தடையுண்டோகள்ளவேடம் தாங்கித்திரிந்தேதான்
திடமாய்வளர்த்தபெண்ணைத் திருடிப்போனக்கால்
சும்மாவிடுவர்களோ தோகைதனைக்கொண்டேக
எம்மான்வரத்துதித்த பெருமானேகாங்கேயா
தேவிமனவருத்தம் தீர்த்துக்களித்திருக்க
தாவியவரிடத்தில் தாழ்ந்தயவுசெய்து
கிருபைதரவேண்டுமென்று கேட்டுப்பலவாறாக
இருபதம்போற்றுமுனியே யின்பமுடன்பார்த்து
நல்லகாரியம்நீரும் நாடும்படிசெய்யுமென்று
வல்லதிருவாயால் மகிழ்ந்துரைத்தாரம்மானை

விருத்தம்

திரும்பியே தேவியாரும் தேவமா முனிவன்கூட
விரும்பிப்பின் பற்றிச்செல்ல மேவிய சோலைபுக்கி
கரும்பிநல் ரசத்தையொத்த கனிமொழிகுமுதச்செவ்வாய
அரும்பிள நகையாய்மாண்டோ ரணைவரு மெழுப்புவாயே.

எழுப்பென வுரைத்தபோதங் கேகியே வள்ளியுந்தான்
தழுப்புறப புழுதிபட்டுத் தரமிசை கிடக்குஞ்சுற்றம்
முழுவதுமெழுந்திரென்று மொழிந்தனள் வர்கள் தானும்
பழுதிலா தெழுந்துவந்து படியிற்கொக் கரிக்கலுற்றார்

கொக்கரித் தவர்கள்நிற்க குகனுறுமுகமு மின்ன
சக்கரி மருகன்வேலைத் தாங்கியேமயில்மேற் றோன்ற
வெக்கரித் தங்குநின்ற வேடுவரெல்லாமேதான்
மிக்கறி வாகக்கண்டு வேண்டியே பணிந்திட்டாரே.

அம்மானை

திரும்பியேதேவியரும் தேவலோகநாரதரும்
விரும்பிப்பின்பற்றிவர மேவினர்சோலைதனில்
சென்றுவள்ளிநாயகியின் திருமுகத்தைத்தான்பார்த்து
அன்றுதானம்மிடத்தி லதிசயம்போர்செய்திறந்து
கிடக்குமுந்தன்சுற்றமெல்லாம் கிளர்மனத்தோடேயெழும்ப
கடவையெனத்தாய்பெருமை கண்டுபலருமறிய
திருவுளந்தான்பற்ற திருவருள்பெற்றவளாய்
குருவேதான்பாக்யமென்று கோதையுமைபுத்திரரை
சேவித்தவரின் திருவடியைப்பத்தியதாய்
பாவித்தானந்தப் பரவசத்தாளாகி
பிராணன்தனையிழந்து பெரும்புழுதிமீதுபட
தராதலத்தைப்பாயாகத் தானேவிழுந்திறந்த
பிதாவேயெனச்சீராட்டிப் பிரியமாய்த்தான்வளர்த்த
சுதாவான அண்ணர்களே சுகமாகப்போற்றிவந்த
சுற்றத்தாரேநீங்கள் தூயதிருமால்மருகன்
சொற்றவருளதபடி சுகமாயெழுந்திருந்து
குலவிமனக்கவலை குறைதீர்க்கவேணுமென்று
நலமானவாய்திறந்து நாதனுரைப்படியே
பேசியபேச்சின்படித்தில் பிணமாய்க்கிடந்தவர்கள்
வாசுவழியூச்சுவந்து நலனுறக்கஞ்செய்தவர்போல்
உறங்கியெழுந்தவர்போ லுணர்ச்சிமிகவுண்டாகி
திறமாய்ப்பழயபடி சீவனதுவந்தவுடன்
துள்ளியேகொக்கரித்து துரைவேடர்ஜாதியர்கள்
வள்ளினுள்ளெண்ணை யெனவேயிருக்கிடவே
சிவகுமாரன்கொண்ட திருக்கோலந்தான்மாற்றி
தவமபெருகுங்கிருபா சமுத்திரமபோலேபெருகும்
சண்முகமும்பொன்முடியும் தானேமிகத்தோன்ற
திண்புயமுமீராறு திருக்கரவேல்தோமரமும்
சக்கரமுமம்பு தனுவுமிகப்பிடித்து
மிக்குகுழைக்காதுகளில் மிகவேதகத்தகென
திருவடியுந்தான்துலங்க சேர்ந்தனைதிர்ச்சிந்தியே
அருவுருவாய்வந்த அற்புதக்காக்ஷிகளை

விருத்தம்.

அனைவரும் பார்த்துவாடி யங்கமும் நடுங்கியேப்போ
வினைவசம வந்ததென்று விரைமலரடிகளைநாடி
பனையது சாய்ந்தாப்போல படிதனில் வீழ்ந்துபோற்றி
நினைவினுறிந்துவேடர் நிமலனை காத்திடாயே

அம்மானை.

அனைவருந்தான்பார்த்தே அங்கந்திடுக்கிடவே
வினைவசந்தானென்று மெய்நடுங்கியேபயந்து
அடியிற்பனைபோலே யவனிதனில்வீழ்ந்து
படிந்துதிருவடியில் பன்முறையாய் வணங்கி
முருகாவடிவேலா முகுந்தன்றிருமாலின்
மருகாவெனப்பலவாய் வாயில்வந்தவார்போற்றி
செய்துவிழிகளிலே திருவானந்தவாரி
மெய்குளிரவேபெருகி மேனிமயிருஞ்சிலிர்க்க
அளவில்லாச்சந்தோஷ மாகவருள்பெற்றவராய்
குளவுகொட்டிக்கரங்கூப்பி முடிவணங்கியேதுசொல்வார்
எந்தன்குலதெய்வமே வேத்தகுலத்தொழிலே
முந்தவேயெங்களுக்கு முக்கியமாகவிரும்பி
நடத்திவருமிழிகுலத்தார் நாங்களடியேன்கள்
இடத்தில்பரம்பரையாய் யிருக்கின்றவெம்மவரை
அடிமைகொண்டுதீங்கு யாவும்வந்துநேராமல்
மிடிகளணுவில்லாமல் மிகுசேரியைக்காத்து
மருக்கமழுமின்னிலத்தில் வளங்கியதிதேவதையாய்
இருக்கின்றதேவரீர் யிழிகுலத்துநாயேன்கள்
முன்னவன்செய்ததவ முயற்சியாலேயுதித்து
இன்னுளில்யான்போற்றி யெடுத்துவளர்த்திருந்த
பெண்கொடியைத்தானிருளில் பெருங்குடிசையிற்புகுந்து
திண்ணமுடன்சோரமதாய் சேரக்கலந்தேகி
பலர்புகழவேயிருந்த பழுதலாக்குலமேன்மை
நிலவாமிலாதழித்து நீடுலகமுள்ளளவும்
தீருப்பழிப்பொன்றை செய்துபிரசித்தமதாய்
மாருநிருங்கவைத்தீர் மாதமபத்துஞ்சமற்று

வருந்திப்பெற்றருமையதாய் வளர்த்தெடுத்ததாய்தானும்
இருந்துபாதுகாப்பதற்கே யெதிராய்வயிரங்கொண்டு
கடுவிஷத்தைத்தானூட்டும் காலமதிலேபதனை
தடுத்துச்சொல்வாருமுண்டோ தாமேயிக்காரணந்தான்
தேவரீர்தம்முடைய திருவுளமானதற்கு
பாவனையாய்ப்பளிங்கு பார்ப்பதுபோலேதோற்றும்
தமதடியாரானவர்கள் தான்செய்யுங்காரணங்கள்
உமதுகருத்தின்படி யுரைசெய்யவேண்டுமென்று
எங்கள்குலக்கொடியா ளிடத்திலேமையல்கொண்டு
சங்கையுடனெங்களுக்குத் தானேதெரியாமல்
குடிசையில்தானிருந்த கொடுங்காவலைக்கடந்து
படியில்பலவந்தமாய் பதறித்தனிமையிலே
இவ்விடமீட்டுவந்தீர் எமதிறைவனேயானால்
ஒவ்விக்கிருபையுற்றே யுடனேதான்கன்னியுடன்
எங்களூர்சேர்ந்தே இரவிமதியக்கினியும்
கங்கையணிகடவுள் கர்த்தர்சுற்றம்சாக்ஷியதாய்
திருக்கலியாணஞ்செய்து சிறப்பாகநாங்களுமே
விருப்பமுடன்செய்யும் விதமாகவேமுடித்து
சந்தோஷமாகவேதான் தையல்திருத்தேவியுடன்
விந்தையதாயும்முடனே வெகுவாயுமதூர்க்கு
போகலாமென்றந்த போர்வேடராசனுமே
தாகமுடன்வேலவர்க்குத் தானுரைத்தமாத்திரத்தில்
மாதுலனுனகுற வர்க்கத்தோர்சொன்னபடி
சாதுவுடனிசைந்து தானடத்தும்வனெனவே
சொல்லிவள்ளிநாயகியும் தொடர்ந்துவரநாதனும்
மெல்லமெல்லவள்ளிமலை விரைக்காவனங்கடந்து
சீர்பாதங்கன்றி சிவந்துமிகவேயழுந்த
பார்தனிலேநடந்து பண்புடனேதானேகி
மேற்பாடிசிற்றூர்க்கு வேடராசன்முதலோர்
பேர்பெறவேமகிழ்ந்து பிரியமாயெல்லோரும்
ஊர்வந்துசேர்ந்தவுடன் யுறவினரைத்தான்பார்த்து
கூறுகிறேன்சங்கரனார் குமாரனாய்வந்துதித்த
நல்லகுலதெய்வம் நன்னிலத்தைக்காத்துவரும்

வல்லசுப்ரமண்யர் வலியவத்துகம்மாதை
சிறையெடுத்துப்போயினனே திரும்பவேயிப்போது
முறைப்படியேயடியேன் முடிவாய்கோரிக்கைபடி
திருமணமுன்னிலையில் தேன்மொழியாள்வள்ளியரை
பெருமையுடன்பெற்று பெருவாழ்வுச்சேயனுப்ப
சம்மதித்துவந்தேனென்று தாமும்பலரறிய
தம்மதியாலேயரசன் தானுரைத்தானம்மானை
உரைத்தமொழிகேட்டுங் குறவின்முறைசம்மதித்து
பொருகளிக்லாமல் புகன்றனரெல்லோரும்
அடங்கமிகமகிழ்ச்சி யாகித்தேகஞ்சிலிர்த்து
நடங்குமயிர்பொடித்து நோக்கிச்சந்தோஷமுடன்
அய்யன்திருவிளை யாடலென்றுதானடித்து
மெய்யெல்லாம்பூரித்து வேடரசன்குரிச்சியிலே
வாசமிகுங்களபமணி வள்ளியம்மைதனக்கு
நேசமுடன்பூமாலை நீள்கழுத்திலேபோட்டு
தாரைசின்னமூத தவில்முரசுபம்பைகோட்ட
வாரையிருக்குமுலை மாதருடனைவரும்
கூடிச்சகலர்களுங் குலமுறையின்படியே
நாடியதோர்சடங்கு நல்மஞ்சள்நீராட்டி
சடங்குகளைத்தான்வேடன் தன்தேவியால்நடத்தி
திடத்துடனேவணங்கி திவ்யபிரகாசமதாய்
விளங்குமிடத்தினிலே வேங்கைத்தளிர்தனையே
துலங்கச்சோடித்துவைத்த தூயபஞ்சுமெத்தையிலே
எழுந்தருளச்செய்து வியல்பாககாரதற்கு
அழுத்தாததர்ப்பை யாசனமுந்தான்போட்டு
முடிந்தபின்புதானும் முகூர்த்தகாரியங்களுக்கு
வடிவாகச்செய்து மங்களவார்த்தைகளை
பக்கக்குடிசையுள்ள பந்துக்கள்யாவருக்கும்
மிக்கமுள்ளதூதுவரை மிகவேயுரைக்கும்படி
அனுப்பியதூதருரைக்க வந்தருணகாலமதில்
இனிதாகவேவல ரிடத்திலேவீற்றிருந்த

விருத்தம்.

நாதனும்முருகனிடம்விடைகள்பெற்று நாரதமாமுனிவரு மோமஞ்செய்ய
கோதரும்பால்நறுநெய்யும்சமுதையோடு கோமயமும்உமியுமிகக்கொண்டுவேந்
நீதமுடனக்கினியைவளர்த்துக்கும்பம்நேர்மையுடனவக்கிரகசாந்திசெய்து(து
வேதமதேஓதியருந்ததியைகாட்டிவேலவர்க்குவள்ளியைமாமணஞ்செய்தாரே.

முடிக்கின்றகாலமதி லந்தரத்தில் முப்பத்து முக்கோடிதேவர்சித்தர்
கோடிகள்வாகனத்துடனேபிரம்மாருத்ரன்கோவிந்தனிந்திரனும்தேவிமாரும்
வடிவுடையகந்தருவர் முனிவரெல்லாம் மருவுமேகாதசருத்திரர் மற்றபேரும்
தடியுடனேவரும் பூதகணங்கள்சூழ சங்கரனும்பார்பதியுந் தான்வந்தாரே.
வந்தவர்களாகாயந் தன்னினின்று மங்களவாத்தியமுளக்கி மலர்கள்தூவி
சிந்தைமகிழ்ந்தேயவர்களாசிகூறிச்சிறப்புடனே தங்கள்தங்க ளிருக்குமந்த
சொந்தமாமிடமேக ரிஷபமேறி சடலையாடியுமுமையுஞ் சொகுசதாக (ளுரே.
விந்தையுடன்பூதகணம்நெருங்கிசசெல்லவெள்ளியங்கிரிதனில்வீற்றிருக்கின்

அம்மானை.

சடைமுடிநாரதரும் தாமேசிவகுமரன்
விடைபெற்றுத்தானேமை மிக்கக்கனலைவளர்த்து
சமதைகளையும் தனியாவின்நெய்பாலும்
உமியுடனேநெல்பொரியு முற்றதிரவியமும்
நவக்கிரகவோமமதை நடத்தியேயாகுதியை
தவத்தோர்க்குத்தான்கொடுத்து தையல்முருகனையும்
தீவலந்தான்செய்து திருச்சாலிதான்காட்டி
பாவனையாய்வேதப் படிக்குப்பலசடங்கும்
முடித்தகாலத்தில் முகுந்தனயனிந்திரனும்
கொடிகளவரவர்கட் குகந்தவாகனமேறி
முப்பத்துமுக்கோடியென்று முன்சொன்னதேவர்களும்
நாற்பத்தெண்ணாயிரமாய் நவிலுமுனிவரும்
முதலானோர்சூழ்ந்து முழங்கச்சயசயன
இதமாகப்போற்றிவர மினியபூதப்படைகள்
மங்களவாத்தியங்கள் மளமளனத்தான்முழக்க
சங்கையுடன்மத்தியிலே சத்தியாய்வந்துதித்த
பருவதராஜன்பெற்ற பார்வதியாள்தன்னுடனே
விருஷபவாகனத்தில் மிகவேயாரோகணித்து
தேவதேவனான சிவபிரான்வானெல்லையிலே
பாவனையாயெழுந்தருளி பாலன்திருக்குமரன்
குறமகளைக்கலியாணம் குறிக்கும்சம்பிரமங்களை
திறமாகப்பார்த்துமப்போ தேவிசமேதகராய்
சந்தோஷமாய்க்களித்து தாஞசீர்வாதங்களை
விந்தையுடன்செய்து மிகவேவருமுன்னிலையில்

பரிவாய்விஷ்ணு பிரமன் பகருருத்ரன்விண்ணவரும்
சரியாகப்பூமலரைத் தான்வாரியேசொரிந்து
பாலசுப்ரமண்ய பகவானைத்தான்வாழ்த்தி
தாலமதிலஞ்சலியாய் சயசயவென்றேபோற்றி
தந்தகாக்ஷிகண்டு சரவணத்தில்வந்துதித்தோன்
சந்தோசசாகரத்தில் தாமேமிகமூழ்கி
தாய்தந்தைமாமன் தன்மாமியைப்போற்றி
நேயமுடன்மற்றவரை நேர்மையுடனேகிருபை
கூர்ந்துமிகவிருக்கக் கூற்றையுதைத்தோனும்
சேர்ந்துடனேவந்த செரிந்ததிற்ளுடனே
திரும்பிப்போய்வெள்ளிமலை சேர்ந்துகளித்திருந்தார்
விரும்பிவந்தநாரதரும் மிகுமணப்பந்தலிலே
நடத்துஞ்சடங்கைபெல்லாம் நன்றாகவேமுடித்து
திடத்தவெற்றிவேலேந்து தேவனையும்வள்ளியையும்
வணங்கித்துதித்து வரும்போதுமால்மருகன்
இணங்கித்திருத்தேவியுட னிருந்தமணக்கோலமதை
வேடரசன்கண்டு மிகவேமனங்களித்து
தேடரியயிந்த திருவைநாம்பெற்றதற்கு
கிடைக்கும்பாரப்பத்தியின்று கிடைத்ததெனவேகாத்தை
தடைபடாக்கைகொட்டி தானேகூத்தாடினரே
மற்றசுற்றத்தாரும் மனதில்பரவசமாய்
சற்றேமுருகாவென தானேவெறியாடலதாய்
தீர்க்கதண்டம்செய்து திருவடியைத்தான்பணிந்து
மார்க்கமுடன்களித்து மகிழ்ந்திருந்தாரம்மானை
அந்தக்காலந்தனிலே யனந்தமாய்வேடரசன்
சிந்தைமகிழ்ச்சியதை செப்பயாரால்முடியும்
பச்சைமருக்கொழுந்து பலவர்ணப்பூச்சூடி
கச்சணிந்தமின்னார்கள் கலியாணவாசலிலே
வந்திருக்கும்வேடமட மாதர்களுந்தான்களித்து
எந்தன்குலதெய்வமு மினியமருகனுமாய்
பெண்ணேயின்றுபோல பிரியமுடன்நாள்தோறும்
எண்ணிமணக்கோலமுட னிணைபிரியாதிருக்க

மங்களமாய்வாழ்த்தி வாழக்கடவீரெனவே
சங்குமஙுண்யணிந்த தையலருமாடவரும்
வேங்கைமலரிதழின் மிக்ககந்தப்பொடியை
பாங்காய்கையாலிரைத்து பரிவாய்க்கொண்டாட்டமிட்டார்
வேடச்சிறுமி மிக்கசந்தோசமுடன்
ஆடல்மிகப்புரிந்தக் கப்படியேசெய்தனரே
எல்லாருங்கொண்டாடி யின்புற்றிருக்கையிலே
வல்லசுப்ரமண்யர் மகிழ்ந்தாசனத்தைவிட்டு
தானெழுந்துமேவடராசன தீனக்கிருபையாய்பார்த்து
தேனேநிகர்மொழியாள் தேவியிந்தப்பெண்ணரசை
திருத்தணிகைமாமலையில சேர்ந்திருப்போமென்று
அருளுந்திருவாய்திறந்தே அறைந்தனரேயப்போது
கந்தனேதேவரீர்கள் கருத்துக்கிசைந்தபடி
சிந்தைமகிழ்வாய்வேடன் செய்யுமெனச்சம்மதித்தான்
மாதாவும்பாங்கியுடன் வள்ளியம்மையைப்பார்த்து
ஆதாரமாகயெம தன்னைவெகுநாள்ப்பழகி
இருந்தாய்நீயிக்காலம் யேகிக்கணவனுடன்
பொருந்தியேபோகப் புரப்பட்டாய்யென்றுரைத்து
அதிகமாயாவளுட னங்கமதைத்தழுவி
பதியில்சுகமாக பருவமுடனேவாழ்வாய்
வாழிவாழியென்று மகிழ்ச்சியுடன்கிசொல்லி
ஊழியூழிகாலம்வரை யுகந்திருவரும்வாழ்வீர்
என்றவர்களும்வாழ்த்த யினியவள்ளிநாயகியும்
நன்றெனவேயன்னையுடன் நற்றோழியினிடத்தும்
செலவுமிகப்பெற்றவளும் சிங்காரமாகவேதான்
குலவுமவடிவேலருடன் கூடவேதானெழுந்து
போகப்புரப்பட்டுமல்லோ போம்போதவள்பிதாவும்
ஏகமாய்த்தன்னிடத்தி லிருக்குஞ்சிலபொருளை
பெண்ணுக்குச்சீதனமாய் பிரியமுடனேகொடுத்து
நண்ணிப்பின்னேதுடர நாதன்குமரேசர்
கலியாணவாசல் கடந்துவெளியில்வந்து
நலியாமல்மாமனையும் நற்கிருபையால்நோக்கி

வானவர்கள்கொண்டாட வளப்பெருஞ்சிற்றூரினுக்கு
கோனாகவேயிருந்து குவலயத்தில்வாழ்வுபெற்று
சகலசம்பத்துக்களை தானேயனுபவித்து
சுகமையுடன்புத்திரரும் தாமும்பரம்பரையாய்
வாழ்ந்திருமென்று வரமேமிகக்கொடுத்து
சூழ்ந்திருக்கும்வேடரெல்லாம் சுருக்கமாய்த்தானிருத்தி

விருத்தம்.

மாதுலன் குறவரெல்லாம் வாழ்த்தியே யனுப்பிவிட்டு
தாதுலவிய பூஞ்சோலை தானவர் மலைகடந்து
போதுங்கள் மலிந்துவாசம் பொருந்திய தணிகைசென்று
சீதவாய் தேவதச்சன் சமைத்தமண்டபத்தில வந்தார்
வந்தவர் கொலுவில்மேவி மகிழ்வுட னிருக்கும்போது
சுந்தர வள்ளியம்மை சுந்தரன் தன்னைப்பார்த்து
எந்தனின் கணவாசுவாமி யிந்தநற்கிரியின் தன்மை
விந்தையா யுரையுமென்று விமலிபு முரைக்கலுற்றாள்

அம்மானை

வளங்கள்மலிந்தோங்கும் வள்ளிவரையைக்கடந்து
இளந்தோப்புசூழ்கா விரிவிபக்தர்தான் தவஞ்செய்
திருத்தணிகைமாமலையை சேர்ந்துமேயந்தமுன்னம்
பொருந்துமுடன்தச்சன் பொலிவுடனேசெய்துவைத்த
நகரில்போயங்கு நற்சபாமண்டபத்தில்
சிகரிதிருமதிலும் சிறப்புடனேதான்சூழ்ந்து
விளங்குசிங்காதனத்தில் மிகுபொன்னைப்போலவரும்
களபதனுபாரங் கனமாகவேபடைத்த
தேவியுடன்பூவனைத்தும் திருவோங்கியேபிழைக்க
மேவித்திருவுளையுற்று வீற்றிருந்தாரம்மானை
அக்காலந்தன்னி லரியவள்ளிநாயகியாள்
மிக்கதொருகாதலனை மிகப்பணிந்தேதுசொல்வாள்
எந்தன்பிராணபத்தா யிம்மலையைப்பார்ப்பளவில்
விந்தையுடனதிக மேன்பாட்டைக்கொண்டிருக்கு
இதுவிளங்க அரியமகத்துவத்தை

ஓதவருள்தேவா வுமதடியாளீடேற
வெளிப்படையாய்ச்சொல்லுமென்று விண்ணப்பஞ்செய்தனா
அளிமொய்த்தபூங்குழலா ளாரணங்கேநீகேளாய் (ளோ
இந்தவரையை யென்னவென்றுதானிருக்காய்
முந்தப்பரமன் மொழியுங்கடாக்ஷியத்தால்
உலகமெல்லாந்தானு முண்டாகும்போதினிலே
நலமாகத்தான்படைத்த நல்லபருவதத்தின்
அந்தமகத்துவங்கே ளாயிரத்தெட்டண்டங்களும்
முந்தவேநூத்தியெட்டு மோதுபுனல்கங்கைகளும்
வானிலுள்ளதேவர் மனுக்கள்சகலரையும்
மானிலத்திலேயழைத்து வருந்தக்கொடுங்கோல்புரிந்து
பிராணிகளுக்கெல்லாம் பெருத்தகமன்போலே
தாணிதனையாண்டு தானேதான்வீற்றிருந்த
சூரபத்மன்முதலாய் துஷ்டவுணர்பாவரையும
வீரமுடன்சமரில் வென்றுமேதான்செயித்து
சோபமதுதீர்த்து சுகமாயிருப்பதற்கு
தாபமதுதணிக்கத் தான்வந்துமகிழ்ச்சியுடன்
இக்குவகதேயிப்போதி லிந்தக்காலந்தனிலே
வங்கியுடனாயுதங்கள் வைத்துக்கொலைபுரியும்
வளைபிடித்தவேடருடன் வாதுசெய்துபோராடி
கலியாரமேயிந்த கனம்பொருந்துமாவரையை
நெருங்கிச்சவுக்கியமதாய் நேர்மையுடனேயிந்த
பருவதத்தில்தானும் பைங்கிளியேதகைபாரும்
அக்காரணங்களினு லானசெருத்தணியாய்
மிக்கமுடன்சிறப்பு மிகுபேருக்தானுச்சு
இதுவுமல்லாம லின்னமகத்துவங்கள்
அதுவுநான்சொல்லுகிறே னம்மையுமைபவ்வளின்
வளைத்தனும்புமுலைத்தழும்பும் மகிமையுடனேசுகளிக்கும்
குளக்காதனுணசிவன் கூற்றைமிகவுதைத்தோன்
சந்தோசமாகச் சதாகாலம்வீற்றிருக்கும்
விக்தையாய்த்தீர்த்தம் மிகுசேத்திரவிசேசம்
சிறப்புகளைக்கொண்டிருக்கும் திருக்காஞ்சிமாநகர

பாப்பினதுயெல்லையிலே பரிவாகத்தான்விளங்கும்
பெருமையினால்பருவதத்தின் பேராம்சகத்துவமும்
சிருஷ்டிகர்த்தனாய்விளங்குந் திகழ்பிரமதேவராலும்
சொல்லமுடியாத சுகந்தமேதான்மிகுந்த
நல்லபுஷ்பமெத்தனையோ நாட்டிலிருந்திடினும்
மரைமலரைச்சொல்லு மார்க்கமதுபோலே
தரையிலேதன்னிடத்தில் தானேதான்மூழ்கினாரே
பாவக்கிரதனைக்கி பதவியிலேசேர்க்கவல்ல
மாபலநதிகளிலும் வளர்காசிகங்கைமிக்கம்
ஒன்றுமிகொண்டாடிதல்போ லியல்பாம்சமுத்திரஞ்சூழ்
நன்றுபூமண்டபத்தில் நலமாய்ச்சிறந்திருக்கும்
தலங்களிலேமுதன்மை தானேவிளங்குகின்ற
நலந்திகழுங்காஞ்சி நற்பதியேநிகராக
மெய்ஞானவான்கள் மேவித்தவங்கள்செய்யும்
தெய்வீகந்தான்பொருந்தி திகழும்பருவதத்தில்
இந்தத்திருத்தணிகை யினியமலையானதுபோல்
விந்தையுடனேயதிக மேன்பாட்டைப்பெற்றிருக்கும்
இவ்விதகுணந்தானே யியல்பிருதியாய்ப்படைப்பில்
ஒவ்வியிப்பருவதத்தில் வுகந்துநமக்கிருக்கும்
பிரிதியினால்ப்பிரியாமல் பேணியிவ்விடத்திருந்து
துரிதமாய்க்கொமபூதி சொகுசாய்ப்புல்லாங்குழலை
ஊதியுந்தந்திகளை வுருதியாய்த்தானிசைத்து
ஒத்தயேயேழிசையுடைய வுயர்மகரயாள்மீட்டி
மனமகிழ்ச்சியாய்ப்பாடி வல்லசிறுபல்லியமும்
தனதனவென்றேமுழக்கி தானேபலபலவாய்
திருவிளையாடல்களைச் செய்திடுவோம்நம்மிடத்தில்
வருந்திமெய்பக்தியுடன் வருமன்பர்கள்யாரும்
தரிசித்துத்தான்களிக்கத் தானேசந்தோசமுடன்
பரிவாய்நடஞ்செய்து பண்பாய்நடத்துகிறேன்
பெண்ணரசியேயிதற்குப் பிரபலதிஷ்டாந்தத்தை
இன்னமுமென்னாலும் செப்புகிறேன்கேளெனவே
நந்திவண்ணனான நாதன்பரமேஸ்வார்க்கு
மந்திரிகிரிமேரு மகாபருப்பதவாசம்
வாசந்தான்செய்வதற்கு வசதியிருந்தாலும்

தாசரன்பர்தன்னுள்ளத்தே தான்மகிழ்ந்திருப்பதுபோல்
திருக்கயிலாயத்தை தினமுமேதான் விரும்பி
பருப்பதராசபுத்திரி பார்பதியாள் தன்னிடத்தில்
எதத்தேசகாலமுந்தா னிருக்குமகிழ்ச்சியைப்போல்
சத்தகடலைசூழும் தனிவட்டப்பூவுலகில்
பற்பலமலைகளுந்தான் பண்பாயிருந்தாலும்
நற்பருவதத்திருக்க நமக்குப்பிரியமுண்டு
அதற்குச்சாக்ஷியுனக்கு யான்வேறேசொல்வதில்லை
இதற்குநமக்கிப்போ திருப்பிடமாகவுந்தான்
குன்றாஅநேகமுண்டு பூவலயத்தில்மேலான
நன்றானயித்தலத்தில் நமக்குவிருப்பமுடன்
பூரணமாய்வாசம் புகழவேசெய்திடுவோம்
காரணமாகவுந்தான் களித்துமகத்துவத்தை
தெரிந்துகொள்ளக்கடவாய் தெரிசதுமல்லாமல்
திரிலோகசக்ரேசன் தெய்வேந்திரனென்னுன்
மகத்துவத்தைதானறிந்து மற்றையின்பம்பெற்றோர
கருத்தவிருப்பமுற்று தான்பொன்னுலகதில்
இருக்கும்குவளையென்ற யினியசெடிகளிலே
ஒருமூன்றுசெடியதனை உயர்பெருமைதான்படைத்த
சரவணப்பொய்கையிலே தானூன்றியசெடியின்
பிரபலமாய்புஷ்பிக்கும் பெரிதாம்மலர்கள்கொண்டு
பலதினமும்நம்மைப் பாங்காயர்ச்சனைபுரிந்து
நலமாகயிஷ்டசித்தி நம்முடன்பெற்றேகினனே
மூழ்கினோர்தன்பிணிகள் முழுப்பாதகமனைத்தும்
ஊழ்வினைகளெல்லாம் வேரொடுந்தீப்பட்டதொரு
பஞ்சைப்போல்ப்போக்கி பரிசுத்தமானவராய்
விஞ்சையைப்போல்செய்யவல்ல வெகுசிறப்பினைவாய்ந்த
இந்தமலர்ப்பொய்கை யிடத்திலிருந்ததிலே
விந்தையாய்ஸ்தாபித்த மிக்ககுவளைச்செடிகள்
இக்காலத்திலுமருணன் யெழும்புமுதயத்தினிலும்
தக்கமத்தியானமதில் சாய்ங்காலவேளையிலும்
நமதுதிருவடியில் நாடிச்சாத்தும்படிக்கு

காழுகின்றபுஷ்பம் கணக்காகப்பூத்திருக்கும்
பிரளயகாலத்தில் பெருநிலவுலகமதை
நிறவராமூடிடினும் நிலைகுலைந்தேபடைப்பு
இல்லாமல்வாய்வு யிடராகமோதிடினும்
பொல்லாதவூழிவெள்ளம் புரண்டுபெருகிடினும்
அட்டகிரிகள் அண்டபுவனமெல்லாம்
கெட்டழிந்துலோகங் கெடுதியாய்ப்போனாலும்
சருவசங்கார காலங் தன்னில்தெய்வீகமது
பொருந்துமிந்தமாமலைதான் பொல்லாங்கொன்றில்லாமல்
விழங்குமவ்வாரிருந்த மேலாம்சரவணைதான்
களங்கமில்லாதிருந்து கந்தமணமிகுந்து
குவளைமலர்தானுங் குறித்தமுக்காலங்களிலும்
எவ்வளவானாலும் யிருந்துதவ்வொண்டிருக்கும்
கெண்டைவிழியாளே கிளிமொழிவள்ளியமே
மண்டலத்திலிவ்வரையின் மகத்துவம்காமலது
சகலமுந்தான்படைத்த சதுர்முகனுங்கண்டறியா
பகலோனொளிதானும் பறவும்பூமண்டலத்தில்
இருக்கின்றபேர்களிலே பெத்தலைகயாயினுமே
தருக்கள்நிறைந்திருக்கும் நானேதெய்வீகமுற்ற
பருவதத்தைத்தானும் பார்க்குந்தூரத்திருந்து
ஒருமனதாகவேதான் வுறுதியதாகவெண்ணி
தரிசித்தேதான்வணங்க தான்பெறுவார்மயிலே
அறிந்துமறியாதுமுன்னம் ஆரோர்பிறப்பில்செய்த
பாதகமெலாம்நெருப்பில் பட்டபஞ்சுபோலாகும்
தோதகமானபல துன்பங்களானதெல்லாம்
போக்கிப்பரிசுத்தராய் பூதலத்தின்மேலோர்நின்
வாக்கின்படியே மகிழ்வாகத்தானிருப்பார்
இந்தவரையிடத்தில் யெப்போதுமோர்தினந்தான்
வந்துசரவணப்பொய்கை மாபுனலில்நீராடி
பலதரமாய்த்துதித்துப் பண்புடனேநமது
நலமான ஆலயத்தில் நாடிவந்துவிதிப்படிக்கு
நமதுதிருவடியில் நாடிப்போற்றிவணங்கி

சமமாகநெய்விளக்கு தானிட்டுக்கூடும்வரை
யாசகர்க்குததான்கொடுத்து அதன்பின்விடுகிலந்து
பாசமுடன்குருக்கட்கு பணைடத்தான்தானளித்து
புண்ணியசீலர்தங்கள் புகழ்கோரிக்கைப்படிக்கு
கண்களிக்கத்தானுங் கனவளங்களையுகந்து
கற்புக்கரசியெனுங் காதலியாள்தன்னுடனே
நற்புதுமையானதொரு நகரத்தில்போய்ச்சேர்ந்து
சாதுசங்கமாதி சகலநெறிகளையும்
நீதமுடன்மனதில் நிச்சயமாகவெண்ணி
கடைப்பிடியாகவேதான் கருத்துடனேநடத்தி
நடைபெறயிவ்விதமாய் நாளுமிம்மையபோகங்களை
அனுபவித்தபின்னு லப்புறம்மறுமையிலும்
இனிமையாய்த்தேவபோக மின்பமதுபெற்றவராய்
கடைசியிலேசிவரூப கடவுள்சாக்ஷாத்காரத்தை
தடையின்றிகாணியதாய் தானுமிகப்பெறுவார்
அஞ்சுதினம்வரையி லங்கிருந்துபொய்கையிலே
மிஞ்சுபுனல்மூழ்கி மிகுபுதியவஸ்திரங்கள்
உடுத்திநமதடியை வுண்மையுடனேவணங்கி
அடிதொழுதுமவ்விடத்தி லாகுமுறைநடத்தி
நம்மைத்தரிசித்து நாடிவழிபட்டுவருந்
திம்மையனுவில்லாமல் சிறந்ததவத்தினற்கு
இஷ்டமுடன்சித்திபெற்றே யியல்பாகபெண்ணெரும்
அஷ்டாயசூரியமு மானபிள்ளைபந்துக்களும்
சிநேகருடன்மகிழ்ந்து செல்வமனுபவித்து
அநேகபெரியோரால் அருளும்புகழ்ச்சிபெற்று
சந்தோஷமாக தருநிழலில்வீற்றிருந்து
சிந்தையுடன்பதத்தில் வீற்றிருப்பாரம்மானை
பெண்ணரசேயின்னமுங்கேள் பெருந்தவங்களில்சிறந்த
விண்ணவர்கள்மாமுனிவர் மிகுத்ததபோதனரும்
நன்னெறியையெண்ணிமிக நாடிவருவாரும்
தன்னிகரில்லாயிரவி தானும்வலம்வருவார்
சந்திரனுந்தாரகையும் தங்கள்குறைதீர்வதற்கு

வந்து தினமேகும் மகிமைபெற்றயிச்சயிலம்
இந்தமலையை யிகழ்ச்சியாய்ச்சொன்னவர்கள்
நிந்தையர்களிவ்வுலகில் நீண்டபுகழில்லாமல்
கல்விருகஷ்மண்களிலும் கடையாயனுபவிப்பார்
சொல்வதில்சந்தேகமில்லை சுருதிமுறைப்படியாம்
தாங்கள்முன்செய்த தலைநாள்பிரார்த்துவத்தைதம்
பாங்காகத்தீரும் பயன்சற்றறியாமல்
தேகந்தினம்வருந்தி தினங்கவலையுற்றலைந்து
தாகமுடன்பிணி தனித்திருமையாய்வாடி
பூவலமதாய்வரினும் பொல்லாதபாதகங்கள்
ஆவதுதானிற்ப தரியதுகாணம்மானை
பிரமகத்தியாதி பெலத்தகொலைபாதகங்கள்
தலைதனிலேமுக்பமதாய் தானெண்ணிநாள்தோறும்
முடிப்பவர்களானாலும் முக்பமுள்ளயிந்தவெற்பை
வடிப்பமாய்ப்பக்தியுடன் மகிழ்ந்துநம்மைப்பூசனைகள்
செய்வாரால்காட்டின் தீப்பட்டசெத்தைபைப்போல்
மைந்துவினைதானோடி தன்மைபெற்றுமேன்மையதாய்
மகாவிஷ்ணுபிம்மா மலர்ப்பதந்தின்மேலாக
மிகவேதவம்புரிந்து மேன்மைசிவபத்தராய்
புகழ்பெற்றுநாளும் பொற்பதத்திற்சேர்ந்திருப்பார்
இகழாமல்தானு மியல்புடனேயவர்கள்
சதாகாலமுந்தனிகை தனில்வாசஞ்செய்பவர்கள்
சுதாவாகப்பத்தியுடன் சுத்தவயிராக்கியமாய்
நம்மைவழிபட்டு நாளொன்றுமாதாந்தங்களில்
செம்மைமனப்பூர்வமாய் திறமாய்ப்பாத்ரமறிந்து
அகமுமகிழ்ச்சியுடன் அன்பாகத்தர்மமது
தகமையுடனே தான்கொடுப்பாராமாயில்
ஒன்றனந்தமாக உயர்வுபெறவாழ்வுபெற்று
நன்றாகவாழ்வார்கள் நாட்டில்பலபாதகங்கள்
செய்திருந்தாலும் தேய்பிறைச்சந்திரன்போல
நய்ந்துபோகுங்கொடுமை தன்மையுடன்சுத்தர்களாய்
உலகோர்புகழுமிக வுயர்வாழ்வாய்வாழ்ந்திருப்பார்
நலந்திகழும்வள்ளி நாயகியேயின்னமுங்கேள்
மேலேசொன்னதல்லால் விளங்குதணிகாசலத்தின்

நாளேநடந்ததொரு நன்மகத்துவங்கள்பல
உண்மை நகைவிரித்தே வுரைக்கவெகுநாளாகும்
விண்டுகுமரன் மிகவேபோதித்ததையும்
பத்தியுடன்கேட்கமிகு பண்பாகவள்ளியுந்தான்
சத்திவடிவேலர்திருத் தாளைமிகப்பணிந்து
மகிழ்ந்தனள்பூமண்டலத்தில் மதிக்கயெழுந்தருளி
அகில்வாசனைதிமிர்ந்த வய்யனேயெனபத்தாவே
இருக்குந்தலங்களிலே யிதுமுக்யமானதென்று
திருத்தணிகைமாசரிதம் செப்பிநீருள்ளங்கை
நெல்லிக்கனிபோலே நேர்த்தியதாகயிப்போ
சொல்லித்தெளிவாகும்படி சொகுசாயடியாளிடத்தில்
கிருபையுற்றனுக்கிரகம் கீர்த்தியுடன்செய்யுமென
அருமையுடன்கேட்க அன்பாய்மகத்துவத்தால்
சந்தோசமாய்மகிழ்ந்து தாளிணையைத்தான்போற்றி
விந்தையுடனங்கு வீற்றிருந்தாரம்மானை
குத்தியசுரர்கிளை கும்பகும்பலாய்மடித்த
வெத்திவேலாயுதத்தை மிகவேதரித்ததொரு
பாலசுப்ரமண்ய பகவானுங்கொல்லுலையின்
வேலதைப்போல்கண்ணால் மெல்லிதிருத்தேவியுடன்
அந்தமலைபதனி லடுத்ததொருபாரிசத்தில
விந்தையுள்ளபிரமன விஷ்ணுமுதலாயுருவம்
ஈரிரண்டுவிந்தாகி யியலுருவனுன்குருவம்
பாரிலேயொன்றாகப் பகர்நவவுருவங்களும்
ஒன்றாய்ச்சிவபிரமம உயர்லிங்கத்தைத்தாபித்து
நன்றாகமவிதியின் கடந்தபடியேசோடச
உபசாரங்களுடனே யுகந்துபூசனையனைத்தும்
தபசிந்தையாய்க்களித்து தானிஷ்டசித்திகளை
பெற்றவராயன்றுமுதல் பிரபலமாய்வாக்கு
உற்றகாயமும் வொருமித்துகண்ணுதலை
திரிகாலந்தன்னிலேயும் திரமாய்மெய்ப்பத்தியுடன்
அறிவாய்வழிப்பட்டு அடிமைகொள்ளுங்காலையிலே

விருத்தம்.

ஒருதினந் தன்னில்தெய்வ வொளிமிகு விமானந்தன்னை
தருவித்து வள்ளியம்மை தன்னுடன் சேர்ந்துவேலன்
பருவமா யதனிலேறிப் பகர்திருத் தணிகைவிட்டு
மருமலர் மலிந்தகந்த மாதன கிரியில்வந்தார்.

அம்மானை.

ஒருதினந்தான்தெய்வ வொளிவாம்விமானமதை
தருவித்துவள்ளியம்மை தன்னுடனேசேர்ந்து
சுப்பிரமண்யக்கடவுள் சொகுசாகதனிடத்தில்
செப்பமுடனெழுந்து திருத்தணிதான்கடந்து
போய்கயிலையங்கிரிக்கு புரத்திலிருக்குமொரு
வேய்நிறைந்தச்சோலை மிருகந்தமாதனத்தை
சேர்ந்துநவரத்னந் திகழ்காந்திகொண்டிருக்கும்
சேர்விலாமானம்விட்டு சொகுசாகக்கீழிறங்கி
சிறந்தபூதவீரர் தினங்காவல் கொண்டிருக்கும்
சிறந்தருமாளிகையில் நேர்த்தியுடன்தானேகி
வள்ளியம்மையங்கிருக்க வடிவேலர்தான்தரித்து
புள்ளிமயில்வேலன் போனார்தெய்வானையிடம்
தேவராசன்புத்திரி தெய்வானையுமெழுந்து
பாவனையாய்ச்செய்த பலமணிசேர்மாளிகையில்
மாதரசிவள்ளியம்மை மணவாளன்வரும்போது
வேதங்கள்தான்தேடி மிகவேதான்காணாத
மகத்துவங்களையுடைய மாகணவன்தன்வரவை
மிகக்கேட்டமாத்திரத்தில் விண்ணவர்கோமான்மகள்தான்
அதிகசந்தோசமுடன் அருகிலேவந்தணுகி
கதியெனவேபோற்றி கழலிணையில்தான்பணிந்தாள்
பணிந்திடவேகந்தர் பரிபூரணமுடனே
தனியாக்கடாக்ஷம்வைத்து தனதுமனைக்கைநீட்டி
பூரணகும்பம் பொருந்திதிசைமேற்படர்ந்து
வாரணிந்தகொங்கைகளை மார்போடேதான்தழுவி
தாம்சிலம்பகம்புரிந்து தரையில்நடனங்களை
சோம்பாமல்செய்து அலங்கத்திருப்புவனையில்
இருந்தவளர்க்கிகளை பொல்லாத்தையும்போக்கி
திருந்தவேயத்தருணம் திருவள்ளியம்மையுந்தான்
தன்முன்னவள்பாதம் தான்தொழுதகாலையிலே
முன்னிருந்தகன்றுகண்டு முகரும்பசுவதுபோல்
பரிவாய்யெடுத்தணைத்து பண்பாகஆசையுடன்
உரியமொருவருறுதுணையில்லாதவர்க்கு

ஒருபாங்கிகிடைத்ததென் வண்மையுடனேபார்த்து
அருமையுடன்வாழ்த்தி ஆசையுடனேயிருத்தி
திரும்பஅசுரகுல சேனைப்பெருங்கடலை
விருப்பமுடன்குடித்து விண்ணவரைக்காத்த
வெத்திவடிவேல்முருகன் மிகவேமகிழ்ச்சியுடன்
நத்தியேதானுமய நாச்சியர்தங்களோடும்
அந்தப்புரத்துக் கழைத்துக்கொண்டுதானேகி
விந்தைமிகும்பொன்மயமாம் விளங்குசப்ராகூடத்தில்
நவரத்தினமகளினால் நற்கசிதமிட்டிருக்கும்
பவளசிம்மாசனத்தில் பார்க்கடலின்மீதினிலே
மண்மகளுமபூமகளும் மருங்கினிலேவீற்றிருக்கும்
கண்ணனைப்போலே களித்தேயவர்களுடன்
வார்த்தைகளுமாடி மகிழ்ந்திருக்குங்காலமதில்
சோத்தியாயிடப்புறத்தில் நேர்மையுடனேயிருக்கும்
தெய்வயானைதானும் தேவர்சேனபதியை
வையத்திருமுகத்தைப் பார்த்துதனையபத்தாலே
தேவரீர்வலத்தமர்ந்த திருவைவியாத்தகன்னிகையின்
பாவனைகளெல்லாம் பகருமெனப்போற்றிடவே
போற்றிடவேவேலன் புனிதகிருபையுற்று
மாற்றுலவாவென்றதுபிலே வடிவுடையகண்ணாளே
குறப்பாவையின்சரிதை கூர்வேனயிருவசத்தின்
வாத்தினிலேவந்துதித்து வளர்தெய்வயானையேகேள்
பெண்கள்சிகாமணியே பேதையரேவுங்களுடன்
நன்றுமுங்கள்பிறப்பை நானுரைப்பேன்கேளெனவே
வாமனவதாரம் மகாவிஷ்ணுவான அன்னாள்
தாமக்குழலேயுங்கள் தம்மையேபெற்றெடுத்து
நமதுதிருப்புயத்தை நன்றாய்த்தழுவுதற்கு
உமதிருவர்மனங்க ளுளம்மகிழ்ந்துயிச்சையதாய்
பன்னிரண்டுவயதளவு பண்பாய்சரவணையில்
கன்னிவிரதவம் தான்செய்யுமன்னிலையில்
உங்கள்பத்திக்கிரங்கி யுகந்தேகடாக்ஷமதாய்
தங்கள்கருத்தின்படி தானுமேயாகுமென
அதுபரியந்தம் அமரருக்கமதில்
சதுராக்கத்துசம் தன்வயற்றிலவதரித்து

பத்துமாதம்நிறைந்து பருவமங்கையானதின்பின்
நத்துந்தமதுகுல நடைவழக்கையின்படிக்கி
தினைப்புனத்தைக்காக்கவைத்தான் திருத்தேறியத்தருணம்
நினைத்துநாரணத்தலத்தே நேர்மையுடனேசேர்ந்து
மன்மதவேள்கையினால் மனவருந்தியேமயங்கி
சின்மயமானபல திருநடனம்புரிந்து
சோரப்புணர்ச்சிசெய்து சுகத்தையநுபவித்து
கூறமேவுநல்லருளால் கோதைபிதாசம்மதித்து
திருக்கலியாணமுமுடித்து சிலவுபெற்றுத்தணிகை
பருபதத்தில்வாசம் பண்பாகத்தான்புரிந்து
தப்பில்லாவம்மையின் சரிதமிகவுரைத்து
இப்போதுயிவ்விடத்துக் கேளீரேயினிதுவந்தோம்
என்றுநான்சொல்ல யிங்கிரான்மகளிருந்து
நன்றுதிருவாக்கால் நவின்றதையெல்லாங்கேட்டு
கேட்டவுடன்மகிழ்ந்து கேளுமெந்தன்நாயகரே
நாட்டமுடன்பூருவத்தில் நாரணனார்தன்னிடத்தில்
அவதரித்திவளுடனனேகநெடுநாளாய்
தவஞ்செய்சரிதமதை தனிமையாயிப்போது
கூர்ந்துகிருபையுற்று கூடிப்பழையபடி
சேர்த்துவைத்ததேவரீர் திருக்கருணைசெய்ததற்கு
நாங்களடியார்கள்செய்யும் நல்லதொருகைம்மாறு
பாங்குடனேயென்னசெய்வோம் பரிவுடனேதாங்கள்செய்யும்
திருவிளையாடலைத்தான் திறமுடனேயாவருங்கண்
டுருகும்படிபுகழ்ந்தாள் வுயர்விண்ணோன்புத்திரிதான்
உரைத்ததைக்கேட்டுவள்ளி வுளமகிழ்ந்துதாயேமுனம்
விரையாகத்தேவரீர்க்கு நேர்தங்கைதானுகி
அவ்வாறேயிப்பவுந்தானருள்பெறவேவந்திருக்கேன்
இவ்வாறுவள்ளி யெடுத்துமிகவுரைத்து
இனித்தம்மடியாளை ரச்சிக்கவேணுமென்று
தனியாகப்போற்றி தமக்கைதிருவடியில்
வணங்கித்தொழுதிடவே மாதெய்வநாயகியும்
இணங்கிச்சந்தோஷமுடன் எடுத்துமார்போடணைத்து
முதுகைத்தடவி முத்தமிட்டுத்தான்பேச
குதூகலமாய்ப்ரியமமைக்கொண்டகாதலனருளால்
உமைமைத்தாவுந்தந்தையாக வுறுதியாய்ப்பெற்றதன்றி
இம்மையிலேயுனது யிறைவனருள்பெற்றிருக்கேன்
இனியரிசிலேவொன்றுமேயிலை எப்பொருளுந்தான்வேண்டேன்
தனியாயுமதுமனைச் சந்தோசமாய்வேண்டும்

கிருபைபெற்றேனென்று கிளறமனத்தோடே தான்
அருமைபலபேசியவர் அங்கிருந்தாரம்மானை.
சங்கையுடனேவெகுநாள் தானேபிரிந்திருந்த
தங்கைதமக்கையரும் தானேயிருவர்களும்
சிவசுப்ரமண்யர் திருவருளின்படிக்கு
தவமகிமைப்படியே தான்சேர்ந்தமுன்னிலையில்
அன்றுதொட்டுத்தெய்வ யானையும்வள்ளியரும்
நன்றுசப்பேதமின்றி நாயகன்றன்சொற்கேட்டு
சந்தோஷமாகவேதான் தையலிருவர்களும்
சிந்தையுஞ்செய்கையும்போல் செய்யமணியொளிபோல்
பூவினுடன்வாசம் பொருந்தியிருப்பதுபோல்
ஆவியுங்காயமமைந்து யிருப்பதுபோல்
பாலுடனேநீரும் பண்பாகச்சேர்ந்ததுபோல்
தோலுடாரம்பெலும்பு தொந்தித்திருப்பதுபோல்
கங்கையமுனை கடலில்புகுவதுபோல்
திங்களும்வெய்யோனும் சேர்ந்ததைப்போலாக
அக்கணிந்தசெஞ்சடையோ னழலாடிதானன
முக்கணனார்நேத்ரமென மொய்குழலார்தங்களுடன்
சரவணப்பொய்கையிலே தானேயவதரித்து
திறமைமிகுந்தவொரு சிவசுப்ரமண்யருடன்
பிரியாமலென்னாளும் பேசோங்கவேவாழ்ந்து
உரிமையுடன்கந்தன் வுபயபனையாரிடத்தில்
ஏகபச்சமாயவர்கள் யிடத்திலின்பநலங்கள்
போகபாக்யமனுபவித்து புகழ்ச்சியுடனேதானும்
கந்தமலையில் கனகமயமாய்விளங்கும்
விந்தைபொருந்தி விளங்குமணிமாளிகையில்
அமர்ந்துமன்னுயிர்களிடத் தன்புபரிபூரணமாய்
தமதுகடாச்சம்வைத்து தம்மைவழிப்பாடுசெய்யும்
அடியாருக்கிஷ்டசித்தி அகமகிழ்வாகக்கொடுத்து
வடிவேலரிவ்விதமாய் மனைவியிருமருங்கும்
காக்ஷிதானெப்படிக்குக் காண்கிறதென்றாலோ
தாழ்ச்சியில்லாக்கிறவுஞ்சத்தை சத்திவேலாற்பிளந்த
குமாரதேவர்தானுங் குலவுகற்பகதருபோல்
சமமாயதனிடத்தில் தான்தோன்றியேயிருக்கும்
வள்ளிசாதனக்கொடிபோல் மகிழ்வாகவேசிறந்த
செல்விதெய்வயானை திருவள்ளிநாயகியும்
ஞானயோகமிரண்டும் நனறாய்ப்படர்ந்ததுபோல்
தானப்போதிருமருங்கு தனிலேவிளங்கவுந்தான்
இதுவன்றியுமஉமையை யிடப்பக்கம்கொண்டிருக்கும்
விதிரூடுஞ்சிவனார்திரி விழிகள்தனைப்போலே

தேவராசன்புத்திரியும் திருவள்ளிநாயகியும்
தாவயிருபுறமும் தான்பொருந்தியேயிருக்கும்
சன்னிதிமகிமையினால் தாலுலகைசசியெல்லாம்
நன்னெறியனுசரித்து நாட்டமிகைப்போகமெல்லாம்
பெற்றுவாழ்ந்தகடையில் பெருமோக்ஷவீடுபெற்று
கற்றவப்போரானந்தம் நாட்சகவாழ்வுபெற்று
இருக்கவுந்தான்காக்ஷிகளை எப்போதுந்தான்காட்டி
மருவில்லாவாலசுப்ர மணியருந்தேவியர்க்கு
சந்தோஷமாகவருள் தாமேமிகப்புரிந்து
அந்தத்தருணமதி லருள்சேவல்கொடியுடனே
பவண்பவழம்போல்சிறந்த பளபளெனத்தேருடனே
சுவரத்தினக்காந்திகளை நாடுப்புள்ளிபோல்றகு
தோகைமயில்வாகனமும் தோன்றவேபூருவததில்
யாகமதுகாரதர்தான் நன்மையாய்ச்செய்ததிலே
தோன்றியதோர்தகராய் துலங்கியதோர்வாகனமும்
தான்றிகள்வெற்றிவேலும் தனிப்படைகளுங்கோயில்
திருவாயல்முதலியதோர் சேர்ந்ததலத்தமர்ந்து
ஆறுமுகப்பெருமாள்தா னருளுங்கட்டளைப்படிக்கு
பணிவிடைகள்செய்து பாங்காயிருந்தகதை
துணிவுடனன்பாய் சொன்னேன்காணம்மானை
கம்பகடறக்கழிற்று கணேசனொருமருப்பு
தும்பிமுகத்தைங்கானும் தோகைவல்லபைவாழி
பாதிமதியணிந்தபரமனுமைதான்வாழி
ஆதிதிருமாலு மம்மைலக்ஷுமிவாழி.
வேதன்மனைவி விமலைதிருத்தாளவாழி.
போதமிகுமிந்திரனும் புலோமிசையுந்தான்வாழி.
முப்பத்துமுக்கோடிசார் முக்யருடனேவாழி.
நாற்பத்தெண்ணாயிரங்கோடி நற்றவத்தார்வாழி.
கருடகந்தருவருடன் கணத்தவித்தியாதரரும்
சருவதலங்களிலே தான்வசிக்குந்தெய்வங்களும்
கவிவாணர்பெரியோர் களுக்குடனேயிக்கதையை
புவிதனிலேதானு புகழ்வோருந்தான்வாழி
இந்தவம்மானைதனை யெடுத்துவாசிப்பவரும்
சிந்தையாய்க்கேட்பவரும் விளம்புவருந்தான்வாழி.
சிவசுப்ரமண்ய தேவருந்தெய்வானைவள்ளி
தவஞ்சேர்சரிதமவர் தங்கள்பதம்வாழியதே.

வள்ளிநாயகி அம்மானை,

முற்றிற்று.

பழனியாண்டவர் சகாயம்.

இந்நூலச்சியற்றப் பொருளுதவிசெய்த கனவான்

சாப்டூர் ஜமீன்தாரவர்கள் மஹாராஜமான்ய ராஜபூஜிதராஜ சதுரகிரி கட்டாரி நாகைய காமராஜேந்திர ராமசாமி காமயநாயக்கரவர்கள்.

சாப்டூர் 'மகா-ள-ள-ஸ்ரீ சின்ன ஜமீன்தார் ராமசாமி காமய நாயக்கரவர்கள்.

ஒலவக்கோடு முனிசிபல் கவுன்சிலர் மகா-ள-ள-ஸ்ரீ க. கு. பொன்னப்ப நாடாரவர்கள். விருதுபட்டி

| | | |
|---|---|---|
| மகா-ள-ள-ஸ்ரீ | முத்தச்சாமியா பிள்ளை சர்ணம் | கிருஷ்ணபுரம். |
| ,, | சோ. சுந்தரஞ் செட்டியார், | ஷை யூர். |
| ,, | க. அ. குருசாமி நாயக்கர், | ஷை யூர். |
| ,, | சு நல்லய நாயக்கர், | ஷை யூர். |
| ,, | கா. சு. சுப்பா நாயக்கர், | ஷை யூர். |
| ,, | ச. ராமசாமித் தேவர், | ஷை யூர். |
| ,, | க க. சுப்பயத் தேவர், | ஷை யூர். |
| ,, | கா. சுப்பயத்தேவர், | ஷை யூர் |
| ,, | கே. அழகர்சாமி நாயக்கர், | ஷை யூர். |
| ,, | வா. இருளாண்டித் தேவர், | ஷை யூர். |
| ,, | வாமுத்தய்யக் கோனார், | ஷை யூர். |
| ,, | குப்பையாண்டிக் கோனார், | ஷை யூர். |
| ,, | மு வே. சங்கரக்குமாரு நாடார், | கல்லுப்பட்டி. |
| ,, | ஆ. வீ. குழந்தைவேலு நாடார், | ஷை யூர். |
| ,, | மு. வே. குழந்தைவேலு நாடார், | ஷை யூர். |
| ,, | மு. ரு. முத்தைய நாடார், | ஷை யூர். |
| ,, | மு. வீம நாடார், | ஷை யூர். |
| ,, | மு. பொன்னப்ப நாடார், | ஷை யூர். |
| ,, | மு. கருப்பண நாடார், | ஷை யூர். |
| ,, | வெ. இ. பழனிச்சாமி நாடார், | ஷை யூர். |
| ,, | இ. சு. குமாரசாமி நாடார், | ஷை யூர். |
| ,, | வை சுப்பய ஆச்சாரி, | ஷை யூர். |
| ,, | இ. பொ. அழகர்சாமி ஆச்சாரி. | ஷை யூர். |
| ,, | அ. குருசாமி ஆச்சாரி, | ஷை யூர். |
| ,, | செ. சுருளி பண்டாரம், | ஷை யூர். |
| ,, | சீ. செல்வ அய்யர், | ஷை யூர். |
| ,, | அழகம்பெருமாள் கோனார், இ-மு. | ஷை யூர். |
| ,, | க. ச. ராமய்ய நாடார், | திருமங்கலம் |
| ,, | க. மு. அ. மாரியப்ப நாடார், | பேரையூர். |
| ,, | மா. க. ஆறுமுக நடார், | இஷ்ணாபேரி. |
| ,, | சி. மா. கந்தசாமி நாடார், | ஷை யூர். |
| ,, | சி. நயினு ராவுத்தர், | சாப்டூர். |
| ,, | மு. மா. கருப்பய்யா நாடார், | ஷை யூர். |

ம-ா-ா-ஸ்ரீ வெ. அய்பா பிள்ளை, ஷை யூர்.
,, நாடார் உறவின் முறைபார்கள் சாலிச்சந்தை
,, மு அ. முத்தப்ப நாடார், திருமாணிக்கம்.
,, தெ. ரெ. கந்தசாமி நாடார், உசிலம்பட்டி.
,, வை. ஆறுமுக நாடார், ஷை யூர.
,, கொ. அ பழனிக்குமாரு நாடார், ஷை யூர்
,, கி. மு. செல்லமுத்து நாயக்கர், சூலப்புரம்
,, கர்ணம் காமாக்ஷிசுந்தரம்பிள்ளை ஷை யூர்
,, கர்ணம் சங்கரலிங்கம் பிள்ளை சீலே [நாயக்கன்பட்டி.
,, சு. பெரியசாமித் தேவர், பாப்பிநாயக்கன்பட்டி.
,, கர்ணம் சரவணைக்குமாருபிள்ளை, மள்ளப்புறம்
,, வீ ஆறுமுகம் பிள்ளை, ஷை யூர்.
,, சி வெ. வீரயஞ் செட்டியார், ஷை யூர்.
,, பெ. வெ. வீரயஞ் செட்டியார், ஷை யூர்
,, கோ. சண்முகஞ் செட்டியார், ஷை யூர்.
,, சு. கந்தசாமி செட்டியார், ஷை யூர்.
,, நோ. சுப்பய தேவர் கி. மு. அய்யம்பட்டி.
,, வீ. வாழாத்தய்ய மூப்பர், ஷை யூர்.
,, செ. வத்தலை நாயக்கர், ஷை யூர்
,, அ. சி பெரியசாமித் தேவர், துள்ளுகுட்டிநாயக் ]கனூர்.
,, த. செல்லத் தேவர், ஷை யூர்.
,, செ செல்லத் தேவர், ஷை யூர்.
,, நாச்சி மூப்பர், ஷை யூர்.
,, நா. மாரியப்ப நாடார், நாடாக்கள்பட்டி.
,, வி. ராமசாமி நாடார், ஷை யூர்.
,, சா. அய்ய நாடார், ஷை யூர்.
,, ச. மா முத்தப்ப நாடார், ஷை யூர்.
,, மு, மா. சுடலைமுத்து நாடார், வேப்பம்பட்டி.
,, சு. மாரியப்ப நாடார், ஷை யூர்.
,, கா. சு. கு. மாடசாமி நாடார், ஷை யூர்.
,, சுடலைமுத்து நாடார் ஷை யூர்.
,, சின்னச்சாமி நாயக்கர், ஷை யூர்.
,, வி. செ. வடுக குமாரு நாடார், பெருமாள்பட்டி.
,, கி. மு ராசபெத்து ரெட்டியார், விட்டிலப்பட்டி.
,, சங்காலிங்க ரெட்டியார், ஷை யூர்.

## விளம்பரம்.

இப்புத்தகம் வேண்டியவர்கள் திருமங்கலந்தாலூகா எழுமலை போஸ்டு கல்லுப்பட்டிக் கடுத்த நாடாக்கள்பட்டி நாட்டாண்மை S ஆறுமுக நாடாரவர்களிடம் பெற்றுக்கொள்ளலாம்.

## இதன் விலை அணா-8.